

ஸ்ரீசாரதாதேவியாரும் சகோதரி நிவேதிதையும்



# ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர்

## சென்னை-600 004

இனிய பக்திப் பாடல்கள் இரண்டு காஸெட்டுகளில்



ஸ்ரீராமகிருஷ்ணர், ஸ்ரீசாரதா தேவியார், ஸ்ரீசுவாமி விவேகானந்தர் பற்றிய இனிய பாடல்கள்.

பக்திப் பாடல்கள்

இரண்டு காஸெட்டுகள் (தமிழ்)
(C 45)
டாக்டர் பாலமுரளி கிருஷ்ணா
பாடியவை
விலை ரூ. 70/-
**சலுகை விலை ரூ. 50/-**
இச்சலுகை 20-12-'83 வரை
வெளியிடும் நாள்: 1-1-1984

டாக்டர் பாலமுரளி கிருஷ்ணாவின் இனிய கம்பீரமான குரல் நவீன இசைக்கருவிகளுடன் சேர்ந்து கேட்பவர்களை மெய்மறக்கச் செய்கிறது.

உடனே பணம் செலுத்தி உங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ளுங்கள். தபாலில் வேண்டுவோர் தபால் செலவு ரூ. 6/- (இரண்டு காஸெட்டுகளுக்கு) உடன் சேர்த்து அனுப்பவும். V.P.P. கிடையாது. பணத்தை M.O. அல்லது டிராப்ட் மூலம் அனுப்ப வேண்டிய

முகவரி: ஸ்ரீராமகிருஷ்ண மடம்,
16, ஸ்ரீராமகிருஷ்ண மடம் ரோடு,
மயிலாப்பூர், சென்னை-600 004.

பக்திப் பாடல்கள்
(ஸ்ரீராமகிருஷ்ணர் விரும்பிப் பாடியவை)

கவான் ஸ்ரீராமகிருஷ்ணர்
தவியைப் பற்றியும், கண்ணனைப்
ற்றியும் பாடிப் பரவசத்தில்
ழ்ந்த பாடல்கள்; இவை
ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்
என்ற நூலில் வெளி வந்தவை.



அன்புள்ளம் கொண்ட வாசகருக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. வணக்கம். ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்திற்கு 1984 ஜனவரியில் 64-ஆம் ஆண்டு துவங்குகிறது.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். வாசக அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கர்யமாக, தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்யக் கோருகிறோம்.

—ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

சந்தா விவரம்

வருட சந்தா ரூ. 15 ஆயுள் சந்தா ரூ. 180

---

பெறுநர்:
**ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

அன்புடையீர்,
என்னை 'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்' பத்திரிகையின் சந்தாதாரராகப் பதிவு செய்து கொள்ளக் கோருகிறேன்.
என் முகவரி :

இத்துடன் ரூ. 15/ ரூ. 180-ஐ செக்./ M.O. மூலம் அனுப்பியுள்ளேன்.

கையொப்பம்

---

பெறுநர் :
**ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 0**

அன்புடையீர்,
என்னை 'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்' பத்திரிகை யின் சந்தாதாரராகப் பதிவு செய் கொள்ளக் கோருகிறேன்.
என் முகவரி :

இத்துடன் ரூ. 15./ ரூ. 180-ஐ செக M.O. மூலம் அனுப்பியுள்ளேன்.

கையொப்பம்

---

பெறுநர் :
**ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

அன்புடையீர்,
என்னை 'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்' பத்திரிகையின் சந்தாதாரராகப் பதிவு செய்து கொள்ளக் கோருகிறேன்.
என் முகவரி :

இத்துடன் ரூ. 15.l ரு. 180-ஐ செக்./ M.O. மூலம் அனுப்பியுள்ளேன்.

கையொப்பம்

---

பெறுநர் :
**ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 0**

அன்புடையீர்,
என்னை 'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்' பத்திரிகை யின் சந்தாதாரராகப் பதிவு செய் கொள்ளக் கோருகிறேன்.
என் முகவரி :

இத்துடன் ரூ. 15. / ரூ. 180-ஐ செக் M.O. மூலம் அனுப்பியுள்ளேன்.

கையொப்பம்

# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

**1983 டிசம்பர் மாத நிகழ்ச்சிகள் சில**

**அன்னை ஸ்ரீசாரதாதேவியின் ஜயந்தி விழா:**

*26-12-83* திங்கட்கிழமை காலை 5 மணி முதல் பகல் 11 மணி வரை விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன நடைபெறும்.

மாலை வழிபாட்டிற்குப் பிறகு இரவு 7 மணிக்கு 'ஸ்ரீசாரதாதேவியாரின் வாழ்வும் வாக்கும்' பற்றிய சொற்பொழிவுகள்.

*16-12-83* வெள்ளி வைகுண்ட ஏகாதசி (காலை 8-30 மணிக்கு ஸ்ரீமத் பகவத்கீதை முழுவதும் பாராயணம்)

*14-12-83* சுவாமி பிரேமானந்த ஜயந்தி

*30-12-83* சுவாமி சிவானந்த ஜயந்தி

*31-12-83* சுவாமி சிவானந்த ஜயந்தி (சொற்பொழிவு)

டிசம்பர் 16,30 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

சத் சங்கம்: ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை

1. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (டிசம்பர் 4)
2. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—எஸ். எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (டிசம்பர் 11)
3. ராமாயணம்—ஆர். கோதண்டராமன் (டிசம்பர் 18)

மாலை 5-30 மணி முதல் 6-30 வரை சுவாமி பீதாம்பரானந்தர் 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற தலைப்பில் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

---

# சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 1,30,001 முதல் 1,31,169 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை டிசம்பர் மாதத்துடன் முடிவடைகிறது. பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15ஐ டிசம்பர் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 20001 முதல் 20458 வரையிலுமுள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜனவரி மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 30001 முதல் 30862 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை பிப்ரவரி மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 40001 முதல் 40611 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை மார்ச் மாதத்துடன் முடிவடைகிறது.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாகவே செலுத்துவதனால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

நிர்வாகி,
**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்**

## மூன்று நாள் அந்தர்யோகம்

தூய அன்னை ஸ்ரீசாரதாதேவியாரின் 131-ஆவது ஜயந்தி விழா டிசம்பர் 26-ஆம் நாள் திங்கட்கிழமை வருகிறது. அதையொட்டி டிசம்பர் 24, 25, 26 ஆகிய தேதிகளில் சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் மூன்று நாள் அந்தர்யோகம் நடைபெறும். அதில் கலந்து கொள்ள விரும்புவோர் 'மேனேஜர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004' என்ற முகவரிக்குக் கடிதம் எழுதித் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ளவும்.



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | டிசம்பர்—1983 ருதிரோத்காரி ஸூ மார்கழி மீ | இதழ் 12

பொருளடக்கம்



ஆயுள் சந்தாதாரராகச் சேருவதன் மூலம் **ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்** பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவுங்கள்.





ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின், நமன் இல்லை. —திருமூலர்



# பிரார்த்தனை

वेदान्तार्थाभिधानेन सर्वानुग्रहकारिणम् ।
यतिरूपधरं वन्दे शङ्करं लोकशङ्करम् ॥

வேதாந்தார்த்தாபிதாநேந ஸர்வாநுக்ரஹகாரிணம் ।
யதிரூபதரம் வந்தே சங்கரம் லோகசங்கரம் ॥

வேதங்களின் உண்மைப் பொருளை உபதேசித்து யாவருக்கும் அனுக்கிரகம் செய்பவரும், உலகத்திற்கே க்ஷேமத்தைக் கொடுப்பவருமான துறவி வடிவம் கொண்ட ஆதிசங்கரரை வணங்குகிறேன்.

சீர்கொண்ட ஆனந்த மாகி எங்கும்
செறிவாகிப் பரமாகித் திரம தாகி
ஏர்கொண்ட கருணைதிரு வுருவ மாகி
எழில்கொண்ட மலைமகளை இடத்திற் கொண்டோன்
கார்கொண்ட நிறங்கொண்ட முகுந்த னாதிக்
கடவுளர்வந் தடிபரவும் கடவுள் கொன்றைத்
தார்கொண்ட முடியனவன் அடியைத் தாழ்ந்து
தாழாத பெருங்கதியில் வாழா நிற்பாம்.







நீங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரை ஒரு துறவி என்றோ பிரம்மஞானி என்றோ, எப்படி வேண்டுமானாலும் அழைத்துக்கொள்ளுங்கள். ஆனால் அவரைப் போன்று எல்லா வகையிலும் நிறைநிலை பெற்ற ஒரு மனிதர் இந்தப் பூமியில் இது வரையிலும் தோன்றியதே இல்லை என்ற உண்மையை மட்டும் நான் உங்களுக்கு உறுதியாகச் சொல்ல விரும்புகிறேன். இந்த யுகத்தில் காரிருளில் ஆழ்ந்திருந்த உலகத்தின் முன்னால், பேரொளி நிறைந்த தீபஸ்தம்பமாக அவர் ஞானஒளியைப் பரப்பிக்கொண்டிருக்கிறார். இந்தக் கலங்கரை விளக்கின் ஒளியில்தான் மனிதன் இப்போது எளிதாகப் பிறவிப் பெருங்கடலைக் கடக்க இயலும்.

உயர்ந்தவன் தாழ்ந்தவன், பிராம்மணன் சண்டாளன், ஆண் பெண் அனைவருக்கும் அவரை வழிபட உரிமை உண்டு. எவர் ஒருவர் பக்தியுடன் ஸ்ரீராமகிருஷ்ணரை வழிபடுகிறாரோ அவர் என்றென்றும் ஆசீர்வதிக்கப்பட்டவராக் விளங்குவார்.

‘‘நான் கடைப்பிடித்த அதே கடவுட்காட்சியை நீயும் பெறுவாய். அது மட்டுமன்று; எவர் பரிவுடன் இறைவனை அழைக்கிறாரோ அவரை நோக்கி இறைவன் நிச்சயம் வருவார்; ஏனெனில் இறைவனுடன் தொடர்பு கொள்வது என்பது எல்லோராலும் இயன்ற ஒன்றே; வேண்டுவது

அருள்தாகமே'' என்றார் ஸ்ரீராமகிருஷ்ணர். அவரது உபதேசங்கள் இந்துமதத்தின் சாரமாகும். இந்த உபதேசங்களைப் புதுமையான வையாகவோ, தமக்கே உரித்தானவையாகவோ அவர் ஒருபோதும் உரிமை பாராட்டினாரில்லை. இதற்காகப் பெயரையும் புகழையும் அவர் விரும்பவில்லை.



இன்று இந்தியாவின் பல இலட்சக் கணக்கான மக்கள் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் பெயரை அறிந்திருக் கிறார்கள். இல்லை, இந்தியாவிற்கு அப்பாலும் அந்த மாமனி தரின் ஆற்றல் பரவியிருக்கிறது. இந்த உலகில் எந்தப் பகுதியிலாவது சத்தியத்தை வெளிப்படுத்தும் ஒரு சொல்லை, ஆன்மிகத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு வார்த்தையை, நான் சொல்லியிருந்தால் அவையனைத்தும் என் குருநாதருக்கே உரியவை என்பதையும், தவறான சொற்களெல்லாம் எனக்கே உரியவை என்பதையும் நான் ஏற்கிறேன்.

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் உங்களுக்கு உண்மையான நம்பிக்கை இருக்குமானால் அவர் என்னை வாழ்வில் வழிகாட்டி நடத்திச் சென்றதைப் போல் அல்ல, அதை விடவும் ஆயிரம் மடங்கு அதிகமாக உங்களுக்கும் வழிகாட்டி அழைத்துச் செல்லுவார். அவர் அருளை அனைவரும் பெறுவார்களாக!

# நான் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர்

என் குருநாதர் வயதானவர். அவர் காசை ஒருபொழுதும் தீண்டமாட்டார். அவர் கிடைத்த ஏதோ சிறிது உணவை உண்டார். உடுத்தது சில முழம் பருத்தித் துணி; அவ்வளவுதான் அவருடைய தேவைகள். எவரிடமிருந்தும் எந்தப் பொருளை யும் அவர் பரிசாக ஏற்பதில்லை. மேலான இந்த ஒழுங்குகளை இவர் இவ்வளவு உறுதி யாகக் கடைப்பிடித்தனால்தான் அவர் எவருக்கும் கட்டுப்படாத சுதந்தர மனிதராக விளங்க முடிந்தது.

என் குரு ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் நோயுற்று இருந்தபொழுது ஓர் அந்தணர் அவரை அணுகி, ''ஐயனே! தங்களது அளப்பரிய மனவலிமையை நோயுற்ற உடற்பகுதியின் மீது செலுத்தி அந்த நோயை எளிதாகக் குணபடுத்தி விடலாமே!'' என்று யோசனை கூறினார். அதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர், ''என்ன! எந்த மனதைக் கடவுளுக் கென்றே நான் அர்ப்பணம் செய்துவிட்டேனோ அதை மீட் டெடுத்து இந்த அற்ப உடல் மீது செலுத்துமாறு கூறுகிறீரா?'' என்று கேட்டார். அவர் உடலையும் நோயையும்பற்றி நினைக்கவே மறந்துவிட்டார் அவரது மனம். இடைவிடாமல் இறையுணர்விலேயே இரண்டறப் பிணைந்திருந்தது. ஆம், அவரது மனம், இறைவனுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டுவிட்டிருந்தது. அவர் இந்த மனதை வேறு எந்தக் காரியத்திற்கும் பயன்படுத்தினாரில்லை.

**சுவாமி விவேகானந்தர்**



# ஏன் பள்ளி கொண்டீர் ஐயா?



## கிருபானந்த வாரியார்

திருமால் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கிருர். மழை, பனி, காற்று, வெயில் இத்தனையும் அவருக்குச் சொந்தம். 'வேறு நல்ல படுக்கை வீடு கிடைக்கவில்லையா? ஏன் இப்படி மழையையும் வெயிலையும் தாங்கிக்கொண்டு பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கிருர்?' என்ற வினு எழுகிறது.

இந்த வினுவுக்கு விடை சொல்லக் கருதுகிருர் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை. அவர் மிகப் பெரிய தமிழ்ப் புலவர்; கற்பனை நிறைந்த கவி பாடுகிற தமிழ்க் காளிதாசர்.

'நாராயணன் பாற்கடலில் பள்ளி கொண்ட காரணத்தை நான் கூறுகிறேன்' என்பார் போல் அவர் கூறுகிருர்.

கண்ணபிரான் இளமையில் யசோதை வீட்டில் வளர்ந்தார்; முற்பிறப்பில் மாதவம் புரிந்த கோபிகைகளுக்கு அருள் புரியும்பொருட்டுப் பகவான் அவர்கள் வீட்டில் சென்று அவர்கள் அறியா வண்ணம் பால் தயிர் திருடி உண்பாராயினர்.



நாள்தோறும் பால் காணுமல் போவதைக் கண்ட கோபியர் மிகவும் வருந்தினுர்கள். 'இது பூனையின் வேலையா? பெருச்சாளியின் வேலையா?' என்று ஐயுற்ருர்கள். ஒரு நாள் கண்ணன் உண்பதைக் கண்டுவிட்டார்கள். யசோதையிடம் ஓடி, ''அம்மா! அன்ருடம் எங்கள் வீட்டில் பால் தயிர் களவு போகின்றன; யார் திருடுகின்றனரோ என்று சந்தேகித்தோம்; இன்றுதான் உண்மை விளங்கியது. உன் அருமைப் புத்திரன் கிருஷ்ணன்தான் அம்மா தினமும் திருடுகிருன். எங்கள் வீட்டில் நாங்கள் கணவனுரிடம் வசவு வாங்குகிருேம். இந்த அநியாயம் உண்டா?'' என்று கூறி முறையிட்டார்கள்.

யசோதை மிகவும் சினந்தாள். ''கண்ணு! இது என்ன வேலை? களவைக் கனவிலும் கருதலாமா? உனக்கு நம் வீட்டில் என்ன குறை? நீ ஏன் பிறர் வீட்டில் சென்று திருடி, திருடன் என்று பேர் வாங்குகிருய்? இனி அப்படிச் செய்யாதே'' என்ருள்.

கண்ணபிரான், ''அம்மா! இவர்கள் பேச்சு முழுப் பொய். நானே சிறுபிள்ளை; என் வயிறு ஏரியா? மடுவா? இத்தனை பேர் வீட்டிலும் நான் ஒருவன் திருடி உண்பேனு? என் வயிறு கொள்ளுமா? இவர்கள் கணவனை வஞ்சித்துப் பாலையும் மோரையும் குடித்துவிட்டு என் மீது பழி சுமத்துகிருர்கள்'' என்ருன்.

யசோதை என்ன செய்வாள்! ''கோபிகைகளே! என் மகன் சொல்வதிலும்





நியாயம் இருக்கிறது. நீங்கள் கைப்பிடியாகப் பிடித்து வாருங்கள். நான் தண்டிப்பேன்'' என்றாள்.

''அப்படியே பிடித்து வருகிறோம்'' என்று கூறி, அவர்கள் அகன்றார்கள்; 'இந்த மாயக் கிருஷ்ணன் தான் திருடி உண்டுவிட்டுத் தன் தாயிடம் நம்மைத் திருடிகள் என்று சமர்த்தாகக் கூறுகிறான். இவன் வரட்டும்; சரியான பாடம் கற்பிக்க வேண்டும்' என்று நினைத்தார்கள். அவரவர் வீட்டில் கதவுக்குப் பின்னால் ஒளிந்திருந்தார்கள்.

வழக்கம்போல் கண்ணபிரான் அவர் மனைதோறும் சென்று காய்ந்த பாலை எடுத்துப் பானையுடன் பருகினான். அந்த ஆய்ச்சியர் ஓடி வந்து பிடித்து, ''திருட்டுக் கிருஷ்ணா! அகப்பட்டுக்கொண்டாயா?'' என்று கூறி, மத்தெடுத்து முதுகில் அடித்தார்கள்.

இவ்வாறு கண்ணன் மத்தடி படுவது கண்டு மனைவிக்குத்தானே மனவருத்தம் உண்டாகும்? இலக்குமிதேவி மிகவும் உள்ளம் உலைந்தாள்.

''பெருமானே! இப்படி வாருங்கள். உங்களுக்கு என்ன தலையெழுத்து? ஏன் இப்படி அரைப் படி பாலும் முக்கால் படி பாலும் திருடி மத்தடி படுகிறீர்கள்? நான் பிறந்த இடம் பாற்கடல்; என் தாய் வீட்டிலேயே படுத்துக்கொள்ளுங்கள். பாற்கடலாகிய என் தாய் மனையில் படுத்துச் சுகமாகத் துயிலுங்கள். கண் விழிக்கிறபோதெல்லாம் படுத்தபடியே பாலை மொண்டு மனமார வயிறாரக் குடியுங்கள்'' என்று கூறித் தன் கணவனைப் பரிவுடன் பாற்கடலில் குடியாக்கினாள்.

இந்த இனிய கருத்தை நமது மகா வித்வான் அகிலாண்டேச்வரியம்மை பிள்ளைத்தமிழில் கூறுகிறார்—

முத்தநகை விதுமுகப் பொதுவியர் கடப்பால்
முழுக்கவன் தாழ்வலித்து
முடுங் கவாடம் திறந்து மனைபுக்குண
முனிந்தவர் பிடித்தடிக்கும்
மத்தடி பொறுத்துவரு துணைமுகிலை யுண்டுகண்
வளர்ந்துறைதி என்று தன்னை
வயிறுளைந் தீன்றவொரு பாற்கடல் குடியாக்கும்
மடமானை யஞ்சலிப்பாம்.



# மனிதரை ஆட்கொண்ட வள்ளல்

கி.வா. ஜகந்நாதன்

குயிலைப் பார்த்து மாணிக்கவாசகர் பேசுகிறார். அது வடிவத்திலே சிறிதாக இருந்தாலும் இனிதாகப் பாடும் தன்மை உடையது. தேன் நிறைந்த பழங்கள் உடைய சோலைகளில் உலாவுகின்ற தன்மை உடையது. 'அத்தகைய குயிலே, நான் சொல்வதை நீ கேட்பாயாக' என்று சொல்லத் தொடங்குகிறார்.

தேன்பழச் சோலை பயிலும் சிறுகுயிலே
இது கேள் நீ.

இறைவன் எல்லாவற்றையும் தந்தருளுகின்ற வள்ளல். அவன் வானத்தில் இருந்தாலும் அங்குள்ள தேவர்களிடத்தில் அவனுக்கு ஈடுபாடு இல்லை. வானத்தைப் பழித்துவிட்டு இந்த மண்ணுலகத்தில் எழுந்தருளுகிறான். இங்கேயுள்ள அடியார்களாகிய மானிடர்களை ஆட்கொள்கிறான்.

வான்பழித்து இம் மண்புகுந்து மனிதரை
ஆட்கொண்ட வள்ளல்.

என் உடலை விட்டுவிட்டு என் உள்ளத்திற்குள் புகுந்திருக்கிறான். என்னுடைய உணர்வே அவனாக இருக்கிறான். அவனுக்குச் சமானமாகிய வேறு ஒருவன் இல்லை.

"ஊன் பழித்து உள்ளம் புகுந்து என் உணர்வு அது ஆய ஒருத்தன்."

அந்தப் பெருமானுடைய திருத்தேவி மெல்லிய நோக்கை உடையவள். அந்தப் பார்வை மானினுடைய விழியைப் பழித்து விளங்குகிறது. அந்தப் பெருமாட்டியின் மணாளனாகிய சிவபெருமான் மாணிக்கவாசகரை ஆண்டவன். அவனை வரும்படியாகக் கூவுவாயாக என்கிறார்.

தேன்பழச் சோலை பயிலும் சிறுகுயிலே
இது கேள் நீ;
வான்பழித்து இம் மண்புகுந்து மனிதரை
ஆட்கொண்ட வள்ளல்
ஊன்பழித்து உள்ளம்புகுந்து என் உணர்வு
அது ஆய ஒருத்தன்
மான்பழித்து ஆண்ட மென்நோக்கி
மணாளனை நீ வரக் கூவாய்.

"தேனும் பழமும் நிறைந்த சோலையில் உலாவுகின்ற சிறிய குயிலே, நான் சொல்லும் இதனைக் கேட்பாயாக. வானைப் பழித்துவிட்டு, இந்த மண்ணுலகத்தில் எழுந்தருளித் தன்னுடைய பக்தர்களை ஆட்கொள்ளுகின்ற வள்ளல்; என்னுடைய உடம்பைப் பழித்து, உள்ளத்திற்குள் புகுந்து என் உணர்வே மயமான தனிச் சிறப்பு உடையவன் சிவபெருமான். மானினுடைய கண்ணைப் பழித்து விளங்குகின்ற கண்ணையுடையவள் ஆகிய மெல்லிய நோக்கைப் படைத்த உமாதேவியாருடைய அந்த மணவாளனை இங்கே வரும்படியாகக் கூவுவாயாக."

சோலை வளம் சிறந்தது ஆதலின் தேனும் பழமும் நிறைந்திருக்கிறது. குயில் வேறு மரங்களுக்குச் செல்லாமல்







பழங்கள் நிறைந்த சோலையில் தங்குவது. 'இது' என்று சொன்னது, ஆண்டவனைப் பற்றிச் சொல்கிறேன்; அதனைக் கேட்பாயாக' என்றபடி. தேவலோகத்தில் ஆண்டவனுக்கு அருகில் இருந்தாலும் அவனுடைய பெருமையைத் தேவர்கள் அறிந்துகொள்வதில்லை. ஆதலின் 'வான் பழித்து' என்றார். இந்த மண்ணுலகத்திலுள்ள அடியார்கள் இறைவனிடத்தில் உண்மையான அன்பைச் செலுத்துபவர்களாதலின் அவர்களை ஆட்கொள்கிறான். ஆதலால், 'வான் பழித்து இம் மண் புகுந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல்' என்கிறார். வேறு யாரும் கொடுக்க முடியாத உயர்ந்த பொருளைக் கொடுப்பவன் ஆதலின், எல்லாவற்றிலும் சிறந்த முக்தியைத் தருபவன் ஆதலின் வள்ளல் என்றார். ''இந்த உடம்பினால் எதுவும் பயன் இல்லாமையினால் இதனை விட்டு விட்டு என்னுடைய உள்ளத்தில் புகுந்தான்.'' மணிவாசகப் பெருமான் எப்போதும் ஆண்டவனைத் தம் உள்ளத்துள் தியானிக்கிறவர். அதைத் தம்முடைய செயலாகச் சொல்லாமல் இறைவன் செயலாக வைத்து, 'உள்ளம் புகுந்து' என்கிறார். உள்ளம் உணர்ச்சிமயமானது. உலகத்திலுள்ள பொருள்களைக் கண்டு அவற்றில் ஆசைகொண்டு உணர்ச்சி பெறுவது சாமானிய மனிதர்களின் இயல்பு. மாணிக்கவாசகர் இறைவனையே எண்ணி, தியானித்து அப்போது உண்டாகின்ற உணர்ச்சியே அவனாக இருக்கின்றவர்; 'என் உணர்வு அது ஆய ஒருத்தன்' என்றார். ஒருத்தன்-தனக்கு நிகர் இல்லாதவன். பெண்களுடைய



நோக்குக்கு மான் கண்ணை உவமை கூறுவது வழக்கம். அம்பிகையின் நோக்கம் மென்மையாக இருக்கிறது. அடியார்களைப் பார்க்கிற பார்வையில் அவர்கள் உள்ளம் குளிரும்படி நோக்குகிறாள். அதனால், 'மான் பழித்து ஆண்ட மென் நோக்கி' என்றார். அந்தப் பெருமாட்டியைத் திருக்கல்யாணம் செய்து கொண்டவன் இறைவன். எனவே, 'மென்நோக்கி மணாளன்' என்றார். 'அவனை வந்து அருள் செய்யும்படி கூவுவாயாக' என்கிறார். 'நீ வரக் கூவாய்.'

இலட்சியம் இல்லாத மனிதன் திசையறியும் கருவி இல்லாத மரக்கலம் போன்றவன்.

—ஒரு பக்தர்



பணிவும் எளிய வாழ்க்கையும் ஒருவனை அமர நிலைக்குக் கொண்டு செல்லும். கர்வமும் ஆடம்பர வாழ்க்கையும் அவனைப் பிறப்பு இறப்பாகிய சக்கரத்தில் மீண்டும் மீண்டும் சுழல வைக்கும். உண்மையான பணிவு பூரண ஆத்மிக வளர்ச்சியின் விளைவாக ஏற்படக்கூடிய ஒப்பற்ற சக்தியாகும்.

-ரிஷிகேஷ் சிவானந்தர்





# கடவுள் கிருபை

- பிரம்மசாரி சுந்தர சைதன்யா

ஸ்ரீசாரதாதேவியாரின் சீடர்களில் ஒருவர் சுவாமி அரூபானந்தர். அவர் நீண்ட காலம் தூய அன்னையாருக்குச் சேவை செய்யும் பாக்கியம் பெற்றவர்.

ஸ்ரீசாரதாதேவியாருக்குத் தொண்டு செய்ததனுல் அரூபானந்தரின் உள்ளம் பண்பட்டுச் சிறந்த சாதகராக அவர் விளங்கினுர்.

அரூபானந்தருக்கு ஆன்மிக வாழ்க்கையின் லட்சியத்தை அடைய வேண்டும் என்பதில் தணியாத ஆர்வம் இருந்தது. ஆனுல் அதே சமயம் ஆன்மிக முன்னேற்றத்தைப் பாதிக்கும் வகையில் தமது உள்ளத்தில் தோன்றிய எண்ணங்களை அவரால் முழு அளவில் தடுக்க முடியவில்லை.

எனவே, அவர் ஒரு நாள் அன்னை ஸ்ரீசாரதாதேவியாரிடம் சென்று கோபமான குரலில், ''அம்மா! நான் தங்களுடன் நீண்ட காலமாக வாழ்ந்து வருகிறேன். அதனுல் நான் பெற்ற பயன் தான் என்ன? இன்னும் நான் பெண்ணைப் பெண்ணுகத்தான் பார்க்கும் நிலையில் இருக்கிறேன். ஆண் பெண் என்ற பால் வேற்றுமை என் உள்ளத்திலிருந்து இன்னும் அகலாமலே இருக்கிறதே!'' என்று சொல்லி முறையிட்டார்.

சீடர் கூறியதை அருள் அன்னை ஸ்ரீசாரதாதேவியார் கருணையோடு கேட்டார்.

ஸ்ரீ அன்னையார், தம் சீடரான சுவாமி அரூபானந்தரின் தலையில் கையை வைத்து, ''என் குழந்தாய், எல்லாம் சரியாகிவிடும்'' என்று ஆசி கூறினுர்.

ஸ்ரீ அன்னையார் ஆசி கூறியருளிய அந்த விநாடியிலிருந்து சுவாமி அரூபானந்தரிடம் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டது. அதாவது அவர் எல்லாப் பெண்களையும் தூய அன்னை ஸ்ரீசாரதா தேவியாராகவே பார்த்தார்.

தம்மிடம் ஏற்பட்ட இந்த மகத்தான மாறுதலும் பரிபக்குவமும் அரூபானந்தருக்கே வியப்பைத் தந்தன. தமது மனம் உண்மையிலேயே உயர்ந்த நிலையில் உறுதி பெற்று விட்டதா என்பதை அவர் சோதித்துப் பார்க்க நினைத்தார்.

ஆதலால் அவர் தம்மைத் தாமே சோதித்துக் கொள்ளும் வகையில் மிகவும் துணிச்சலான சோதனையில் இறங்கினுர். தமது அறையில் பல கோணங்களில் கவர்ச்சியாகத் தோன்றும் பெண்களின் படங்களை வைத்தார். என்ன ஆச்சரியம்! பால் உணர்வைத்



ஸ்ரீசாரதாதேவியார்

தூண்டிவிடும் அந்தப் பெண்களின் படமெல்லாம் தூய அன்னை ஸ்ரீசாரதா தேவியாரின் திருவுருவங்களாகவே அவருக்குத் தோன்றின.

மேற்கூறிய பரிசோதனையின் மூலம் தம்முடைய மனம் சலனப்படாமல் உறுதியான நிலையில் இருக்கிறது என்பதை, சுவாமி அருபானந்தர் தெளிவாக உணர்ந்தார்.

பிறகு அவர் ஸ்ரீ அன்னையாரிடம் சென்று அவர் திருவடிகளில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கினர். அன்னையிடம் அவர், ''அம்மா, தாங்கள் என் உள்ளத்தை வென்றுவிட்டீர்கள். நான் சோதித்துப் பார்க்க நினைத்தேன். அதிலும் தாங்களே வெற்றி பெற்றீர்கள்'' என்ருர்.

ஸ்ரீசாரதாதேவியார் அருள் ததும்ப, ''என் மகனே, நீ கேட்ட வரத்தின் பயனைத் தாற்காலிகமாக உனக்கு இப்போது கொடுத்திருக்கிறேன். ஆனல் இப்போதைய உனது இந்த உன்னத மனநிலை தொடர்ந்து உன்னிடம் இருக்காது. இதே மனநிலை தொடர்ந்து உன்னிடம் நிரந்தரமாக இருக்க வேண்டுமானல் நீ ஆத்மசாதனைகள் மூலம் இதை உனக்குச் சொந்தமாக ஆக்கிக்கொள்ள வேண்டும்'' என்ருர்.

'அன்னையின் திருவருள் காரணமாகவே நம்முள் இந்த மாற்றம் இப்போது ஏற்பட்டுள்ளது. இந்த மனநிலையை ஆன்மிக உழைப்பின் மூலம் எனக்கு உரியதாக நான் செய்ய வேண்டும்' என்று அருபானந்தர் சங்கல்பித்துக்கொண்டார்.

அவ்விதம் அவர் சங்கல்பித்ததற்கும் அன்னையின் திருவருள்தான் காரணம் என்று சொல்ல வேண்டும்.





ஸ்ரீ சாரதாதேவியார்

மகான்களிடமிருந்து பெறும் அருள் செல்வத்தைத் தங்கள் சாதனைமூலம் தங்களுடைய சொந்த அனுபவமாக்கிக் கொள்பவர்கள்தாம் சிறந்த அருட்செல்வர்களாக விளங்குகிருர்கள்.

ஸ்ரீ அன்னையார் இப்போதும் இருக்கிருர்; அவரது திருவருள் இப்போதும் நமக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. "நாம் மட்டும் எச்சரிக்கையோடு விவேகமாக நடந்து கொண்டால் ஸ்ரீ அன்னையின் திருவருள் நிச்சயமாக நம்மை ரட்சிக்கும்.

தர்மத்தை ஒருவன் தெரிந்துகொள்ள வேண்டுமானல் நன்ருக அறிந்த ஒரு மகானிடத்தில் வணங்கிக் கேட்டால்தான் அவர் நமக்குச் சாஸ்திரத்தில் உள்ளபடி உபதேசிப்பார். உபதேசித்ததை விச்வாஸத்துடன் நன்ருகக் கேட்டால், பிறகு தர்மத்தை உள்ளபடி அறிந்தவனுகிருன்.

—அழகியசிங்கர்



# மகான் ராம்பிரசாத்

ஆர். வெங்கட்ராமன்

வங்காளத்தில் தோன்றிய தேவி பக்தர் ராம்பிரசாத். காளிதேவியின் தரிசனத்திற்காகக் கசிந்துருகிய மனநிலையில் இருந்தபோது அவர் அருமையான பக்திப் பாடல்களை இயற்றினார்.

பக்திப் பாடல்களைப் பாடுவதற்கு ஏற்ற வகையில் கடவுள் தந்த வரப் பிசாதம் போன்று அவருக்கு இனிய குரலும் அமைந்திருந்தது.

அடிக்கடி கங்கை நதியில் நின்று கொண்டு ராம்பிரசாத் காளிதேவியைக் குறித்து மனமுருகிப் பாடுவது வழக்கம். அவ்விதம் ஒரு நாள் அவர் மெய்ம் மறந்து பாடிக்கொண்டிருந்தபோது நவாப் ஸிராஜ் உத்தவுலா என்பவர் கங்கையில் படகில் சென்றுகொண்டிருந்தார். அவர் ராம்பிரசாத் பாடுவதைக் கேட்டு மயங்கினார். ஆதலால் அவர் படகை நிறுத்தச் சொல்லி, ராம்பிரசாத் பாடுவதை நிறுத்தும் வரையில் அவரது பாட்டைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

நவாப் ஸிராஜ் உத்தவுலா தம்முடன் மூர்ஷிதாபாத்திற்கு ராம்பிரசாத் வர வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ஆனால் ராம்பிரசாத் உடனே செல்லவில்லை; பின்பு ஒரு சமயம் காளிதேவியின் சங்கல்பம் என்ற எண்ணத்தில் மூர்ஷிதாபாத் சென்றார்.

மகாராஜா கிருஷ்ணசந்திரர் செய்த பொருளுதவி காரணமாக ராம் பிரசாதுக்குக் குடும்பத்தைப் பற்றிய கவலைகள் முழுவதும் தீர்ந்துவிட்டன. ஆதலால் அவர் முழுமனதுடன் ஆன் மிகச் சாதனைகளில் ஈடுபடத் தொடங்கினார்.



ராம்பிரசாத் மூர்ஷிதாபாத்தில் நவாபைச் சந்தித்தார்

ஒரு நாளைக்கு இரண்டு வேளைதான் ராம்பிரசாத் வீட்டுக்குச் சாப்பிடச் செல்வார். ஏகாதசி, அமாவாசை, பௌர்ணமி போன்ற தினங்களில் வீட்டுக்குத் திரும்பாமலே 'பஞ்சமுண்டி' போன்ற தாந்திரிக ஆசனங்கள்அமைத்து அவர் தியானம் செய்வது வழக்கம்.

திடீரென்று ஒரு நாள் காளிதேவியின் தரிசனம் அவருக்குக் கிடைத்தது. அதிலிருந்து அவரது உடலில் ஒருவகையான தெய்விகப் பிரகாசம் தோன்ற ஆரம்பித்தது.







பஞ்சமுண்டி ஆசனம் அமைத்தல்

ஒரு நாள் ராம்பிரசாத் வேலியைப் பழுது பார்த்துக்கொண்டிருந்தார். அப்போது அவருக்கு உதவியாக அவரது மகள் ஜகதீச்வரி இருந்தாள். அவள் ஒரு பக்கத்தில் இருந்துகொண்டு கயிற்றைக் கொடுக்க, இவர் மறுபக்கத்தில் இருந்து கயிற்றை வாங்கி வேலியைக் கட்டினார்.

அவ்விதம் நடந்துகொண்டிருந்தபோது இடையில் ஜகதீச்வரி எழுந்து ஏதோ வேலையாகச் சென்றுவிட்டு, வெகு நேரம் கழித்துத் திரும்பி வந்தாள். அவள் வந்து பார்த்தபோது வேலி முழுவதும் கட்டப்பட்டிருப்பதைக்கண்டு ஆச்சரியப் பட்டு, ''உங்களுக்கு யார் கயிற்றை எடுத்துக் கொடுத்தார்கள்?'' என்று ராம்பிரசாதிடம் கேட்டாள்.

''ஏனம்மா! நீதானே கயிற்றைக் கொடுத்துக்கொண்டிருந்தாய்?'' என்றார் ராம்பிரசாத்,

''இல்லையப்பா, நடுவில் நான் ஒரு வேலையாக வெளியே சென்றிருந்தேன்'' என்று மகள் சொன்னாள்.

அப்போதுதான் சாட்சாத் காளி தேவியே தமது மகள் உருவத்தில் வேலியை அமைப்பதற்கு உதவியிருக்கிறாள் என்ற விஷயம் ராம்பிரசாதிற்குத் தெரிய வந்தது.

இன்னொரு சமயத்தில் நீராடுவதற்காக ராம்பிரசாத் கங்கைக்குச் சென்றுகொண்டிருந்தார். அப்போது ஓர் அழகிய பெண் அவர்முன்னால் தோன்றி, ''நீங்கள் பக்திப் பாடல்களைப் பாடுவதை நான் கேட்க விரும்புகிறேன்'' என்று சொன்னாள். அதற்கு ராம்பிரசாத், ''கங்கா ஸ்நானம் செய்த பிறகு திரும்பி வந்து பாடுகிறேன்'' என்று சொல்லிவிட்டு



ராம்பிரசாத் மகளின் உருவத்தில் காளிதேவி

நீராடச் சென்றார். அவர் நீராடி முடித்துத் திரும்பி வந்து பார்த்தபோது அந்தப் பெண்ணை அங்கே காணவில்லை. அதற்குப் பதில் பக்கத்தில் இருந்த கோவில் சுவரில், ''நான்தான் அன்னபூரணி. உன் பக்திப் பாடலைக் கேட்பதற்காக வந்தேன். காத்திருக்க நேரமில்லை. நீ காசிக்கு வந்து என் முன்பு பாடு'' என்று எழுதியிருந்தது.

ஆகவே ராம்பிரசாத் காசியை நோக்கிப் புறப்பட்டார். ஆனால், திரிவேணிக்கு அருகிலேயே, தேவி அன்னபூரணி அவர் கனவில் தோன்றி, ''நீ இங்கேயே பாடு'' என்று சொன்னாள். உடனே ராம்பிரசாத் அங்கேயே ஓர் மரத்தடியில் உட்கார்ந்து அம்பிகையைக் குறித்த பக்திப் பாடல்களைப் பொழிந்து தள்ளினார்.

மிகவும் கடுமையான ஆத்மசாதனை



ராம்பிரசாத் எதிரில் அன்னபூரணி

களைச் செய்தவர் என்று ராம்பிரசாதைப் பற்றிச் சொல்லுவார்கள். அவற்றில் ஒன்று, சுடுகாட்டில் ஒரு பிரேதத்தின் மீது உட்கார்ந்து சாதனை செய்வதாகும்.

ராம்பிரசாத் வாழ்ந்த இடத்திற்குப் பக்கத்திலேயே அஜுகோஸாய் என்ற ஒரு வைணவர் வசித்து வந்தார். அவர் எதையும் கிண்டல் செய்யும் வழக்கம் கொண்டவர். ராம்பிரசாத் பாடும் பக்தி நிறைந்த பாடல்களையெல்லாம், தம் இயல்புக்கு ஏற்ப அஜுகோஸாய் கேலி செய்து பாடி வந்தார்.

உதாரணமாக, ராம்பிரசாத், ‘அம்பி கையைப் பக்தியோடு பாடிக்கொண்டே உள்ளத்தின் ஆழத்தில் முழுகு’ என்று பாடினால், இந்த வைணவர் அதற்குப் பதிலாக, ‘முழுகாதே! நீ மூச்சுத் திணறிப் போவாய்’ என்று பாடுவார். ‘இந்த உலகம் ஒரு மாயை’ என்று ராம்பிரசாத் பாடினால், இவர் அதற்கு மாறாக, ‘இந்த உலகம் ஓர் உல்லாச மாளிகை’ என்று கிண்டல் செய்து பாடுவார்.

இந்த வேடிக்கையைப் பார்க்க மகாராஜா கிருஷ்ணசந்திரர் இவர்கள் இருவரும் இருக்கும் இடத்தைத் தேடி வருவது வழக்கம். அஜுகோஸாயின் கேலிப் பேச்சுக்கள் ராம்பிரசாதிற்குக் கஷ்டமாகத்தான் இருந்தன. ஆனால் வேறு வழியின்றிப் பொறுத்துக் கொண்டார்.



பிணத்தின் மீது அமர்ந்து தாந்திரிக சாதனை செய்தல்



அஜுகோஸாயியும் ராம்பிரசாதும்

ராம்பிரசாத் இல்லற வாழ்க்கையை விட்டுவிடவில்லை; என்றாலும், எப்பொழுதும் கடும் ஆத்மசாதனைகளில் ஈடுபட்டிருந்ததனால் குடும்பம் எப்படி நடக்கிறது என்பதை அறியாமல் இருந்தார்.

அவருடைய தாயாரின் மரணத்திற்குப் பிறகு குடும்பத்தைக் கவனிக்கும் முழுப் பொறுப்பும் அவர் மனைவி சர்வாணியின் தலையில்தான் விழுந்தது. தன் கணவருக்கும் குடும்பத்துக்கும் சேவை செய்வதையே அவள் தன் கடமை என்று எண்ணி ஒழுகி வந்தாள். சிறந்த சகதர்மிணியாக விளங்கினாள்.

எப்பொழுதும் காளிதேவியின் நினை

வாகவே இருந்த ராம்பிரசாத் பிறர்மீது அன்பும் கருணையும் கொண்டவர்.

மகாராஜா கிருஷ்ணசந்திரர் இறக்கும் தறுவாயில் இருக்கிருர் என்று கேள்வியுற்றதும், ராம்பிரசாத் அவர் இருந்த இடத்திற்கு ஓடோடிச் சென்று, அவர் உயிர் பிரியும் வரையில் பக்திமயமான இனிய பாடல்களைப் பாடி அவரை மகிழ்வித்தார்.



கிருஷ்ணசந்திரரின் அந்திம காலத்தை உணர்ந்த ராம்பிரசாத் பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தார்

மகாராஜா கிருஷ்ணசந்திரர் இறந்த பிறகு ராம்பிரசாத் சில நாட்கள் மிக்க துக்கத்தில் ஆழ்ந்திருந்தார். அதன் பிறகு அவரிடம் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. அவர் தம்மை மறந்து எப்பொழுதும் காளிதேவியைப்பற்றி மனம் உருகிப் பாடலானுர்.

தீபாவளியன்று தம் கையினுலேயே காளிதேவியின் களிமண் விக்கிரகம் ஒன்று செய்து, இரவு முழுவதும் வணங்குவது ராம்பிரசாதின் வழக்கம். அவர் பூஜை செய்வதைப் பார்ப்பதற்குப் பெருந்திரளாக மக்கள் கூடுவார்கள். அவர்களைச் சிரித்த முகத்துடன் வரவேற்பது ராம்பிரசாதின் வழக்கம்.

அன்று அவருடைய கடைசித் தீபாவளி. வழக்கத்திற்கு மாருக, அவர் அன்றைய தினம் யாருடனும் பேசாமல், காளிதேவியை வணங்குவதிலும், பக்திப் பாடல்களைப் பாடுவதிலும் மெய்ம் மறந்து இருந்தார்.

அடுத்த நாள் காலை புனித நீர்க்குடத்தைத் தலையில் சுமந்து பாடிக்கொண்டே அவர் கங்கைக்குச் சென்ருர். நதியில் இறங்கிக் கழுத்தளவு நீரில் நின்று கொண்டு பக்தி ததும்பப் பாடத் தொடங்கினுர்.

பாடிக்கொண்டிருந்தபோதே அவர் ஆவி அவரது உடலை விட்டுப் பிரிந்தது.

ராம்பிரசாதுக்குச் சமகாலத்தவரான முத்துசாமி தீட்சிதருக்கும் அப்படித்தான் உயிர் பிரிந்தது.



மகாத்மா ராம்பிரசாதின் ஆவி உடலை விட்டுப் பிரிந்தது

தீபாவளிக்கு முதல் நாள் அவர் மதுரை மீனுட்சியைக் குறித்து, 'மீனலோசனி, பாச விமோசனி' என்ற பாட்டைப் பாடிக்கொண்டிருந்தார். 'பாசவிமோசனி' என்ற அடிகளைப் பாட ஆரம்பித்ததும் அவர் உயிர் பிரிந்தது.





சிறுவர் பகுதி

# அம்பாதாஸ்

— நாடோடி

ராமதாஸின் சிஷ்யர்தாம் அம்பாதாஸ். அவர் நீண்ட தவம் செய்தும் அவருக்கு ராமர் பிரத்தியட்சமாகவில்லை. ஆகவே அவர் அதே கவலையாக இருந்தார். ஆனால் குருவுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளை அவர் மறக்கவில்லை.

ராமதரிசனம் கிடைக்க வேண்டிய பக்குவம் அம்பாதாஸருக்கு வந்து விட்டது என்பதை ராமதாசரும் உணர்ந்தார். ஆகவே பகவான் என்றைக்கு அம்பாதாஸருக்குக் காட்சி அளிக்கிறாரோ என்று இவரும் அந்த நாளை எதிர்நோக்கிக்கொண்டிருந்தார்.

ஒரு நாள் ராமதாஸரும் அவருடைய சிஷ்யர்களும் எங்கோ சென்று கொண்டிருந்தார்கள். அப்போது வழியில் ஒரு கிணற்றையும் அதன் பக்கத்தில் ஓங்கி வளர்ந்திருந்த மரத்தையும் கண்டார்கள். மரத்தின் நிழலில் சற்று நேரம் தங்கலாம் என்று குரு தீர்மானித்தார். எல்லாரும் அங்கே தங்கினார்கள்.

அந்த மரத்தின் கிளையொன்று கிணற்றுக்கு மேலே படர்ந்திருந்தது. குரு, அம்பாதாஸரைக் கூப்பிட்டு, அந்த மரக்கிளையைக் காட்டி, "கோடரியைக் கொண்டு அந்தக் கிளையை வெட்டு" என்று சொன்னார்.

உடனே அம்பாதாஸ் கோடரியை எடுத்துக்கொண்டு மரத்தின் மீது ஏறினார். குரு அவரைப் பார்த்து, "நுனிக் கிளையில் உட்கார்ந்துகொண்டு அடிமரத்தை வெட்டு" என்று சொன்னார். அம்பாதாஸர் குருவின் வார்த்தையைத் தட்டாமல் அப்படியே நுனிக் கிளையில் போய் உட்கார்ந்து கொண்டார்.

இதைக் கண்டு மற்றச் சிஷ்யர்கள் பயந்தார்கள். நுனிக் கிளையில் உட்கார்ந்துகொண்டு அடிமரத்தை வெட்டினால் அம்பாதாஸர் கிளையோடு கிணற்றில் அல்லவா விழுவார் என்று நடுங்கினார்கள்.

அதற்கேற்றாற்போல, குரு ராமதாஸர் சிஷ்யர் அம்பாதாஸரைப் பார்த்து, "நுனிக் கிளையில் உட்கார்ந்துகொண்டு அடிமரத்தை வெட்டப் போகிறாயே. கிணற்றில் விழுந்தால் என்ன செய்வாய்?" என்று கேட்டார்.

அதற்கு அம்பாதாஸர், "பிறவிக் கடலிலிருந்தே என்னைக் காப்பாற்றப் போகும் தாங்கள் இந்தக் கிணற்றிலிருந்து என்னைக் காப்பாற்றமாட்டீர்களா?" என்று சொல்லிக்கொண்டே மரத்தை வெட்டினார்.

மரத்தின் மீது கோடரியினால் நான்கு போடுகள் போட்டதும் கிளை முறிந்தது. சிஷ்யர்கள் எதிர்பார்த்தபடியே அம்பாதாஸர் கிளையுடன் கிணற்றுக்குள் விழுந்தார்.

ஆனால் குரு ராமதாஸர், அம்பாதாஸர் கிணற்றினுள் விழுந்து விட்டாரே என்று கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. அவர் ஏதோ வேதாந்த விஷயங்களைப்பற்றிச் சிஷ்யர்களிடம் சொல்லிக்கொண்டு போனார்.

கிணற்றில் விழுந்த அம்பாதாஸர் தண்ணீரில் மூழ்கி மேலே எழுந்தது தான் தாமதம். ராமர் அவருக்குத் தரிசனம் கொடுத்தார். ராமதரிசனம் ஆனதுமே அம்பாதாஸருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி சொல்லி முடியாது. கடைசியில் கஷ்டப்பட்டுக் கரைக்கு வந்து சேர்ந்ததும், குருவின் காலில் விழுந்தார். "உங்கள் கிருபையால் எனக்கு ஸ்ரீராமதரிசனம் கிடைத்தது. நான் பாக்கியசாலி ஆனேன்" என்று சொன்னார்.

oooooooooooooooooooooooooooooooooooooooooooooooo

செத்தவரைப்பற்றி நல்லதையே பேச வேண்டும், நல்லதையே எழுத வேண்டும்.

—ஆங்கிலப் பழமொழி



இன்றோ அல்லது நாளையோ மனதாலோ உடலாலோ துயருற்று அழியப்போகும் இந்த உடலுக்காக அறவழியை விட்டு விலக எவன் தான் விரும்புவான்?

—ஹிதோபதேசம்

அன்னை, பூமியைவிடக் கனத்தவள். பிதா, ஆகாயத்தைவிட உயர்ந்தவர். மனம், வாயுவைவிட வேகமானது. கவலை, காய்ந்த புல்லைப் போல எரியக்கூடியது.

—யுதிஷ்டிரர்



# ஆன்மிக வினா-விடை

-சுவாமி கமலாத்மானந்தர்

**கவிஞர் தேனி முருகேசன், தேனி**

**கேள்வி: வைஷ்ணவக் கோவில்களில் பெரும்பாலும் விபூதி தருவதில்லை; குங்குமம், துளசி தருகிறார்கள். சிவன் கோவில்களில் விபூதி, குங்குமம் கொடுக்கிறார்களே! இந்து மதத்தில் இந்த வேறுபாடு இருக்கலாமா?**

**பதில்:** ஒவ்வொரு தெய்வ .வழிபாட்டிற்கும் தொன்றுதொட்டு வந்த சில பண்புகள் உண்டு. சிவனுக்கு உரியவை திருநீறு, வில்வம்; விஷ்ணுவுக்கு உரியது துளசி; தேவிக்கு உரியது குங்குமம். இது வேற்றுமை அல்ல; இந்து மதத்தின் சிறப்பு.

**ரேவதி சாம்பசிவம், பெங்களூர்-75**

**கேள்வி: பெண்கள் சிவலிங்கத்தைத் தொட்டுப் பூஜை செய்யலாமா? அவ்வாறானால் எவ்விதம் சிவலிங்கத்தை வழிபட வேண்டும்?**

**பதில்:** பூஜை செய்யலாம். பஞ்சாக்ஷரத்தை ஜபித்து ஆண்கள் செய்வது போலவே பூஜை செய்யலாம்.

வெண்பொங்கல் ஆகியவற்றையும் நைவேத்தியம் செய்வது சிறப்பு. 'கூடாரை வெல்லும்' அன்றைக்கு (மார்கழி 27-ஆம் தேதி) சர்க்கரைப் பொங்கல் நிவேதனம் விசேஷம்.

மேற்கூறிய பழங்களுள் சிறந்தது கதலி. இரண்டாவதாகப் பேயனும், மூன்றாவதாக முந்திரியும் அமையும்.

வழிபாட்டு முறைகள், பொருள்கள் ஆகியவையெல்லாம் வெவ்வேறு இடங்களிலும் வெவ்வேறு சம்பிரதாயத்தினரிடமும் வெவ்வேறாக இருக்கும். ஆண்டவனிடம் கொள்ளும் உள்ளன்புதான் முக்கியம். வழிபாட்டு முறைகளில் ஏதேனும் குறை இருந்தாலும்கூட, பக்தியினால் செய்வதை ஆண்டவன் உகந்து ஏற்பான். இதற்கு உதாரணம் கண்ணப்ப நாயனார்.

அருள்மெய்நாதன், திம்மராஜபுரம், மேலூர்

கேள்வி: மார்கழி மாதத்தில் காலையில் திருப்பாவை திருவெம்பாவை பாடுகிறோம். அதை அபிஷேக அலங்கார நைவேத்தியத்திற்கு முன்னதாகச் செய்வது முறையா? அல்லது பின்னால் செய்வது முறையா?

கர்ப்பூரதீபம் காட்டுவதை ஆரம்பத்தில் செய்வதா, நடுவில் செய்வதா, கடைசியில் செய்வதா?

திருப்பாவை, திருவெம்பாவை பாடி முடிந்தபின் தேவாரம், திருவாசகம், விஷ்ணு சஹஸ்ரநாமம் போன்றவற்றைப் படிக்கலாமா?

பதில்: தங்களின் ஐந்து கேள்விகளையும் ஒரு விதமாகச் சுருக்கி மேலே கொடுத்திருக்கிறேன்.

முதலில் திருப்பாவையையும் திருவெம்பாவையையும் பாடி அடியார்களை எழுப்பிக்கொண்டு, திருப்பள்ளியெழுச்சி பாடி இறைவனை எழுந்தருளச் செய்ய வேண்டும்.

அடுத்ததாக, கர்ப்பூரதீபம் காட்டி, அதன் பின் அபிஷேகமும் அர்ச்சனையும் செய்து, நைவேத்தியமும் தீபாராதனையும் நமஸ்காரமும் செய்ய வேண்டும்.

பிறகு தேவாரம், திருவாசகம், விஷ்ணு சகஸ்ர நாமம், இன்னும் மற்ற ஸ்தோத்திரங்கள் ஆகியவற்றைப் பாராயணம் செய்வது முறை.

அருள்மெய்நாதன், திம்மராஜபுரம், மேலூர்

கேள்வி: மார்கழி மாதத்தில் பிராதக்கால நைவேத்தியத்துக்கு முந்திரிப்பழம், கதலி, பேயன்பழம் இவற்றில் எது உகந்தது என்பதை அறிய விரும்புகிறேன்.

பதில்: கதலி, பேயன்பழம், முந்திரிப்பழம் ஆகிய மூன்றும் கிடைத்தால் சேர்த்து நிவேதனம் செய்யலாம். இவற்றுடன் தேங்காய், வெற்றிலை பாக்கு,





கனகலட்சுமி, மந்தைவெளி

கேள்வி : தர்மபூதஞானம், தர்மிபூதஞானம் என்றால் என்ன?

பதில் : 'தர்மி' என்றால் ஒரு செயலுக்கு அல்லது தர்மம், கர்மம் ஆகியவற்றிற்கு உரியவன்.

'தர்மம்' என்பது ஒருவனுக்கு உரித்தான கடமை, இயல்பு அல்லது செயல்.

'தர்மபூத ஞானம்' என்றால் ஈச்வரனுடைய சிருஷ்டி, ஜீவனுடைய கர்மம் ஆகியவை பற்றிய ஞானம்.

'தர்மிபூத ஞானம்' என்பது ஒன்றிற்கு உடையவனைப்பற்றிய அறிவு—ஜீவன்—ஈச்வரன் ஆகியோரைப் பற்றிய அறிவு.

தங்கமணி, திருச்சி-5

கேள்வி: மதுகைடபர்களான அசுரர்கள் தேவர்களைக் கொல்ல ஆரம்பித்தபோது தேவர்கள் பிரம்மாவிடம் சென்று முறையிட்டனர். பிரம்மா, தேவியைப் பிரார்த்திக்க, தேவி அந்த அசுரர்களைக் கொன்றாள்—இது நவராத்திரி பற்றிய தகவல்களில் இடம் பெறாமல் விடுபட்டது ஏன்?

பதில்: தங்கள் கருத்துக்கு எந்த நூலிலும் ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை. மதுகைடபர் தேவர்களைக் கொல்ல ஆரம்பித்தார்கள் என்பது தேவீ மாகாத்மியத்தில் இல்லை. பிரளயகாலத்தில் தேவர்களே இல்லை.

சின்னதுரை, வந்தவாசி

கேள்வி: அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் உண்டு என்ற கருத்தை விளக்கவும்.

பதில் : அண்டம் என்பது பிரம்மாண்டம். பிண்டம் என்பது நமது உடல் போன்ற தனித் தொகுதி. பிரம்மாண்டத்தில் ஐம்பூதங்கள் இருக்கின்றன. உடலிலும் மண், தண்ணீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எல்லாம் இருக்கின்றன.





# பொங்கல் சிறப்பிதழ்-வாழ்த்து



அன்புள்ள வாசக நண்பரே!

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. வணக்கம் பல.

1984 ஜனவரியில் புதிய ஆண்டு ஆரம்பமாகிறது. இந்தத் தருணத்தில் விஜயம் உங்களிடம் ஒரு புனிதமான பணியை ஒப்படைக்கிறது.

ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தின் ஜனவரி இதழ் பொங்கல் சிறப்பிதழாக வெளிவர இருக்கிறது. ஆனுல் விலையிலோ பக்கங்களிலோ மாற்றம் இராது.

அன்பர்கள் தத்தம் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் பொங்கல் சமயத்தில் புத்தாண்டு-பொங்கல் வாழ்த்து அனுப்புவார்கள். அவ்விதம் செய்வதோடுகூட ரூ. 15 செலுத்தி, பொங்கல் முதல் அவர்களுக்கு நீங்கள் விஜயம் பத்திரிகையையும் பொங்கல் வாழ்த்தாக அனுப்பலாமே.

உங்கள் உற்ருர் உறவினர்களையும் நண்பர்களையும் புதிய சந்தாதாரர்களாகச் சேர்த்து விஜயத்துடன் மங்களகரமாகப் புத்தாண்டைத் துவக்கும்படி செய்யுங்கள்.

இந்த யோசனையைச் சந்தாதாரர்கள் ஏற்றுச் செயற்படுத்துவார்கள் என்று உறுதியாக நம்புகிறோம்.

விஜயம் பொங்கல் சிறப்பிதழை 1000 பிரதிகள் கூடுதலாக அச்சிடுவதாக இருக்கிறோம்.

இந்தக் கூடுதல் 1000 பிரதிகளையும் ஒரு புது மாதிரியான பொங்கல்—புத்தாண்டு வாழ்த்தாகப் பயன்படுத்திக்கொண்டு புது வருடத்தை மங்களகரமாகத் துவக்கும்படி விஜயம் வாசகர்களை அன்புடன் கேட்டுக்கொள்கிறது.

உடன்பிறந்தோரே! உங்களுக்கு எல்லா நன்மைகளும் உண்டாகட்டும்!

வணக்கம்.

தர்மத்தின் தொண்டில்
மிக்க அன்புடன்
ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்



# சகுணப் பிரம்மமும் உபாசனையும்

— வி. ஆர். கணேசன்

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரிடம் பிரம்மசமாஜ பக்தர்கள் பலர் அடிக்கடி வருவதுண்டு. அப்பொழுது, 'நிர்க்குணப் பிரம்ம உபாசனை சிறந்ததா அல்லது சகுணப் பிரம்ம உபாசனை சிறந்ததா? மோட்சமடைவதற்கு எந்த முறையைக் கைக்கொள்வது சுலபம்?' என்ற கேள்வி எழும்.

அப்பொழுது குருதேவர் திரும்பத் திரும்பப் பின்வரும் விளக்கத்தைக் கூறியுள்ளார்—''பிரம்மமும் பிரகிருதியும் ஒன்றே. எப்படித் தீயின் சொரூபம் உஷ்ணம் என்று ஆகிறதோ அதுபோலவே பிரம்மத்தின் சொரூபம் சக்தி அல்லது சைதன்யம் ஆகும். ஆகையால், அன்னையாகிய பராசக்தியிடம் பக்தி சிரத்தையோடு தன்னையே அர்ப்பணம் செய்து சரணடைந்தால் நிச்சயமாக அன்னை பக்தனை ஏற்றுக்கொள்வதன் மூலம் அவனுக்கு அந்தக்கரண சுத்தியை உண்டாக்கி, பிரம்மஞானத்தையும் அளித்தருள்வாள்.''

அதாவது பிரம்மஞானமடைய எவ்வளவு சாஸ்திரங்களைப் படித்தாலும் உடற்பற்றும், 'நான் நான்' என்ற அகந்தையும் இருக்குமளவும் சகுணப் பிரம்மத்தை வழிபடுவதுதான் சிறந்தது என்பது ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்தாகும்.

உபநிஷதங்களில் பல இடங்களில் இதே கருத்துச் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கலாம்.

கடோபநிஷதம் (6-13) கூறுகிறது— ''அவனை (ஆத்மாவை) முதலில் புத்தி சக்திகளாலும், புலன்களாலும் வரையறையப்பட்ட சகுணப் பிரம்மமாகவே அறிய வேண்டும். இந்த சகுணப் பிரம்மத் தியானத்திற்குப் பிறகே அதற்கு அப்பாற்பட்டதும், அருவுருவங்களற்றதுமான நிர்க்குணமான உண்மைநிலை தானே வெளிப்படும். மனதோடு இணைந்த சகுணப் பிரம்மத்தை உபாசிக்க வேண்டும். முதலில் மிச்ரப் (சகுணமும் நிர்க்குணமும் கலந்த) பிரம்மத்தைப்பற்றித் தியானம் செய்வதுதான் சுலபம். பிறகு தூய்மையடைந்த மனதின் விவேகத்தினால் உண்மையை, நாமரூபங்களிலிருந்து அகற்றி நிர்க்குணப் பிரம்மமாக அறிய முடியும்; அதாவது சகுணத் தியானத்தின் பயனாக, திரையை நீக்குவது போல், பகவானின் அருளால் பிரகாசம் உண்டாகிறது.''

சாந்தோக்ய உபநிஷத்தில் (7-ஆம் அத்தியாயம்) பக்தர்களில் சிரேஷ்டரான நாரத முனிவர் சனத்குமாரரிடமிருந்து பிரம்மஞானம் கற்றுக்கொள்வதைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.

நாரத முனிவர் சனத்குமாரரை அணுகி, ''பகவானே, எனக்கு உபதேசம் செய்யுங்கள்'' என்று கேட்கிறார்.

அதற்கு, சனத்குமாரர், ''நீர் எதையெல்லாம் கற்றறிந்திருக்கிறீர்?'' என்று வினவ, நாரதர் பதில் கூறுகிறார்— ''பகவானே, எனக்கு நான்கு வேதங்களும் தெரியும்; இதிகாச புராணங்கள் அனைத்தும் தெரியும், வியாகரண சாஸ்திரம் தெரியும், விஞ்ஞான சாஸ்திரங்களும் தெரியும், எல்லா விதமான கலைகளையும் கற்றிருக்கிறேன்; ஆனால்

பிரம்மத்தைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. ஆத்மஞானம் பெற்றவன் சோக மோகத்தைக் கடந்தவனாவான் என்று உம்மைப் போன்ற பெரியோர் களிடமிருந்து கேட்டிருக்கிறேன். ஆகை யால் தயைசெய்து என்னைத் துன்பக் கடலுக்கு அப்பால் அழைத்துச் செல் வீராக'' என்று.

நாரதரின் வேண்டுகோளுக்கு இணங்க சனத்குமாரர் கிரமமாக, சில பிரதீக-பிரதிமைகளின் மூலமாகப் பிரம்ம ஞானத்தை உபதேசிக்கிறார் என்று சாந்தோக்யம் கூறுகிறது.

அதாவது, பிரம்மத்தை நிர்க்குண மாகக் கருதி அது புலன்களுக்கு எட்டாதது என்று கூறிவிட்டால், அதை அறிந்துகொண்டு ஸ்வானுபவமாக அடைதல் சிரமம் என்று, புலன்களால் அறியப்படும் சில உதாரணங்கள் மூலமாக, கீழ்ப் பிரகிருதியையும் மேல் பிரகிருதியையும் விளக்கிவிட்டு, பிறகு கடைசியாக இவை எல்லாவற்றையும் விட மேலானதான 'நிரதிசய ஆனந்தம்' ஒன்று இருக்கிறது என்று நிர்க்குணப் பிரம்மத்தைப்பற்றி, சனத்குமாரர் எடுத்துச் சொல்கிறார் என்று கூறுகிறது சாந்தோக்ய உபநிஷதம்.

இதில், முக்கியமான அறிகுறி வஸ்துக் களாகக் கூறப்படுவன—பிராணன், வாயு, மனம், ஆகாசம், சூரியன், ஓங்காரம் முதலானவை.

சூரியனைப்பற்றி உபநிஷதத்தில் பல இடங்களில் கூறப்படுகிறது. குறிப்பாக, காயத்ரீ மந்திரம் சூரிய மண்டலத்தில் இருக்கும் புருஷனைத் தொழுவதாகும். 'இந்தப் புருஷனும், வலக் கண்ணிலுள்ள புருஷனும் ஒருவரே' என்று வேதமறிந்த சான்றோர் வழிபட்டு வந்தனர். (பிருக தாரண்யக உபநிஷத்து, 5-14.)

மேலும், ஈசாவாச்ய உபநிஷதத்தில் கடைசியில் வரும் இரண்டு மந்திரங் களும், சூரிய பகவானைக் குறித்துச் செய்யும் பிரார்த்தனையாக அமைந்திருக் கின்றன—''பிரம்மத்தைக் காண வழி விட்டுக் கொடுப்பீர். உமது அழகான வடிவத்தின் மூலம் அந்தப் புருஷனை நான் பார்க்க வேண்டும்; அங்கு இருக்கும் புருஷனும் நானும் ஒன்றே'' என்று.

> நம் தாயாரிடம் சொல்ல முடியாத ஒரு காரியத்தையும் நாம் செய்யக் கூடாது. இப்படி ஒரு விதியை நான் வைத்துக்கொண்டேன். இதனால் நான் பல பாவங்களிலிருந்து விடுபட்டேன்; எனக்குச் சக்தி கிடைத்தது; என் வாழ்க்கை உற்சாகத்துடனும் ஒளி யுடனும் நடக்கத் தொடங்கியது.
>
> —மதனமோகன மாளவியா

ஆகாசத்தைப் பல இடங்களில் பிரம் மத்திற்கு ஒப்பிட்டுக் கூறியிருக்கிறார்கள். விவேகசூடாமணியில் ஆதிசங்கரர் இதை மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார்—

''ஆகாசத்தைப் போல் நிர்மலமாக வும், கொந்தளிப்பற்றதாகவும், எல்லை யற்றதாகவும், சேதனமற்றதாகவும், மாறுதலற்றதாகவும், உள்ளும் புறமும் இல்லாததாயும் (எங்கும் பரவியுள்ள தாயும்) இரண்டற்ற ஒன்றேயாகவும் பிரம்மம் இருக்கிறது. பிரம்மத்தைப் பற்றி வேறு அறியவும் வேண்டுமோ?''








வேதாந்தப் பாதையில் முதற் படியில் அடியெடுத்து வைக்கும் சாதாரண மக்களுக்குக் கடவுளைக் குறிக்கும் சின்னங்களோ அறிகுறிகளோ மிகவும் அவசியமாகின்றன.

வழிபாட்டுக்கு உள்ள சின்னங்களாகச் சிலுவை, சந்திரப் பிறை வடிவம், புத்தகங்கள், நெருப்பு ஆகியவற்றைப் பிற மதத்தவர் வைத்து வழிபடுவதைக் காண்கிறோம்.

அதே மாதிரி கோவில்களிலுள்ள பல வித உருவங்களையும் வழிபடுவதையும் காண்கிறோம். ஆனால், இந்தச் சின்னங்களே அல்லது உருவங்களேதாம் கடவுள் என்ற மனப்பான்மையில் தங்கிவிட்டால், அது தவறான பாதையில் செல்வதாகும். இந்த உருவங்களின் மூலமாக உண்மையான கடவுளை உபாசிப்பதுதான் முறையாகும். உபநிஷதங்கள் இந்த வஸ்துக்களின்மூலம் பிரம்மஞானத்தை அடைவதைப் பற்றித்தான் வற்புறுத்தியிருக்கின்றன.

அதனால்தான் இந்த உண்மையைப் புகட்ட ஒரு குருவின் அவசியம் ஏற்படுகிறது. ஆனால் தன்னடக்கம் பெற்று, குருவினிடமிருந்து சிரவணம் செய்து, தானாகவே சிந்தித்து ஆராய்ந்து தியானம் செய்வதனால் மட்டுமே ஞானம் அடைய முடியும் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

அடுத்த இதழில், உபநிஷதங்களில் பிரம்மத்தைக் குறித்துச் செய்யப்பட்டிருக்கும் ஆராய்ச்சியை விரிவாக நாம் பார்க்கப் போகிறோம்.

## பிரார்த்தனையின் பலன் — 'ஸ்ரீராமதாசன்'

ஒரு பெரியார் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார். அப்போது அவர் தம்மை யாரோ ஒருவன் அழைக்கவும் திடுக்கிட்டு எழுந்தார்.

வந்தவன், ''எழுந்திருங்கள், பிரார்த்தனைக்கு நேரமாகி விட்டது'' என்றான்.

பெரியார், ''நீ யாரப்பா? உனக்கு என்மேல் ஏன் இவ்வளவு அக்கறை?'' என்று வினவினார்.

''நான்தான் சைத்தான்'' என்றான் வந்தவன். பெரியாருக்கு ஆச்சரியம்.

''நீ எல்லோரையும் தூங்கச் செய்து பிரார்த்தனை செய்ய விடாமல் தடுப்பவனாயிற்றே? என்னை மட்டும் எழுப்பிப் பிரார்த்தனை செய்யச் சொல்கிறாயே, என்ன காரணம்?'' என்றார்.

அதற்குச் சைத்தான், ''நேற்று நீங்கள் பிரார்த்தனை செய்யத் தவறிவிட்டீர்கள். அதனால் மிகவும் வருத்தப்பட்டு அழுதீர்கள். கடவுள் நீங்கள் வருந்தியதைக் கண்டு மனமிரங்கி, நீங்கள் பிரார்த்தனை செய்திருந்தால் உங்களுக்குக் கிடைத்திருக்க வேண்டிய பலன்களைக்காட்டிலும் அதிகமான பலன்களை உங்களுக்குக் கொடுத்துவிட்டார். இன்றும் நீங்கள் உறங்கிவிட்டால் மறுபடியும் அழுது அதிகமான நன்மைகளைப் பெற்றுவிடுவீர்கள். அதனால்தான் எழுப்பினேன்'' என்றானாம்.

இறைவனை நினைத்துத் தொழுதாலும் அழுதாலும் அதிக நன்மை ஏற்படும் என்பது இதனால் புலனாகிறது.



# வள்ளலார் வாக்கு









தூண்டாத மணிவிளக்காய்த் துலங்குகின்ற தெய்வம்
துரியதெய்வம் அரியதெய்வம் பெரியபெருந் தெய்வம்
மாண்டாரை எழுப்புகின்ற மருந்தான தெய்வம்
மாணிக்க வல்லியைஓர் வலத்தில்வைத்த தெய்வம்
ஆண்டாரை ஆண்டதெய்வம் அருட்சோதித் தெய்வம்
ஆகமவே தாதிஎலாம் அரிவரிதாந் தெய்வம்
தீண்டாத வெளியில்வளர் தீண்டாத தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்!

—திருஅருட்பா

---

அருள்நெறிக் கதை:-

பீஷ்மர் எப்பொழுது பார்த்தாலும் கர்ணனைச் சற்று இளக்காரமாகத்தான் பேசி வந்தார். மகாபாரத யுத்த ஆரம்பத்தில் யார் யார் பெரிய வீரர்கள், தலைமை தாங்கக் கூடியவர்கள் என்ற சர்ச்சை எழுந்தபோது, அவர் எல்லார் முன்னிலையிலும், ''கர்ணன் சாதாரண வீரன்தான், தலைமை தாங்க அருகதை இல்லாதவன்'' என்று சொல்லி அவமானப்படுத்திவிட்டார். இதைக் கேட்ட கர்ணன், ''பீஷ்மர் யுத்தத்தில் தளபதியாக இருக்கும் வரையில் நான் போர் செய்யமாட்டேன்'' என்று சொல்லிவிட்டான்.

முதல் பத்து நாட்களும் கர்ணன் போர் புரியாமல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

பத்தாம் நாள் பீஷ்மர் அர்ஜுனனால் அடிபட்டுக் கீழே விழுந்தார். பீஷ்மர் வீழ்ந்தார் என்று தெரிந்ததும், எல்லோரும் யுத்தத்தை நிறுத்தி, அவர் பக்கம் வந்தார்கள். அம்புகளினால் ஆன படுக்கையில் அவர் கிடந்தார்.

எல்லாரும் அவரை விட்டுச் சென்ற பின் கர்ணன் அவர் அருகில் வந்தான். ''தாத்தா! எப்பொழுதும் தங்களோடு வம்பு கொடுத்துக்கொண்டிருந்த கர்ணன், தேரோட்டியின் மகன் கர்ணன், தங்களை நமஸ்கரிக்கிறேன்'' என்றான்.

கர்ணனது குரலைக் கேட்டுப் பீஷ்மர் அவனைப் பக்கத்தில் வரச் சொன்னார்.

''குழந்தாய்! நீ பெரிய சூரன், படைகளைத் தலைமை தாங்கி நடத்திச் செல்லக் கூடியவன் என்பது எனக்கு நன்றாகத்





தெரியும். ஆனால் நான் உன்னை மட்டம் தட்டிப் பேசியதற்கு ஒரு காரணம் உண்டு. இந்த யுத்தம் நிகழாமல் எப்படியாவது அதை நிறுத்த வேண்டுமென்று நான் ஆவலாக இருந்தேன். உன்னை நம்பித்தான் துரியோதனன் இந்த யுத்தத்தை ஆரம்பித்திருக்கிறான். உன்னை இகழ்ந்து பேசினால் நீ கோபித்துக் கொண்டு போய்விடுவாய், உடனே துரியோதனன் யுத்தத்தை நிறுத்தி விடுவான் என்று நினைத்தேன். ஆனால் நான் எதிர்பார்த்தது நடக்கவில்லை. எது நடக்க வேண்டுமோ அதுதான் நடந்தது. ஆகவே நான் உன் மனம் புண்படப் பேசிய வார்த்தைகளை மனதில் வைத்துக்கொள்ளாதே!'' என்றார்.

கர்ணன் பதில் பேசாமல் தலை குனிந்தபடியே நின்றான்.

பீஷ்மர் மேலும் சொன்னார்—''அப்பா, குழந்தாய்! நீ தேரோட்டி மகன் அல்ல. நீ சூரியனின் புத்திரன்; குந்தியின் மைந்தன்; பாண்டவர்களுக்கு மூத்தவன். ஆகவே இப்பொழுதாவது துராத்மாவான துரியோதனனை விட்டுப் பாண்டவர்களின் பக்கம் போ.''

கர்ணன் சொன்னான்—''தாத்தா, என்னை மன்னிக்க வேண்டும். நான் குந்தியின் மைந்தன் என்கிற விஷயம் எனக்குத் தெரியும். இருந்தும் என் நண்பன் துரியோதனனுக்கு நான் துரோகம் செய்யமாட்டேன். எனக்கு ஆதரவு அளித்து, என் நண்பனாக விளங்குபவன் அவன். எனக்கு உதவி செய்த அவனுக்கு நான் விசுவாசத் துரோகியாக முடியுமா? இந்த ஆபத்துக் காலத்தில் அவனுக்கு நான் உதவாமல் இருக்க முடியுமா? ஆகவே, தாங்கள் என்னை ஆசீர்வதியுங்கள். யுத்தம் புரிவதற்கு அனுமதி கொடுங்கள். முடிந்தால் துரியோதனனுக்கு ராஜ்யத்தை வாங்கிக் கொடுப்பேன்; அல்லது சுத்தவீரனாக மடிவேன்.''

பீஷ்மர் அவனுக்கு ஆசி வழங்கினார்; ''குழந்தாய், நீ உற்சாகமாக யுத்தம் செய். உன் கடமையைச் செய்'' என்றார்.



# உதட்டளவுப் பிரார்த்தனை

- ரிஷிகேஷ், சுவாமி சிவானந்தர்



காஞ்சீபுரத்தில் அமைந்திருக்கும் காமாக்ஷி அம்மன் கோயிலுக்குப் பல விதவைகள் வந்தனர்.

''ஓ மாதா! ஏ பராசக்தி! எங்களுக்கு விரைவில் முக்தி அளி. நாங்கள் சம்சாரக் கடலில் அலைக்கழிக் கப்படுகிறோம்'' என்று அவர்கள் பிரார்த்தனை செய்வது வழக்கம்.

அவர்கள் பல மாதங்கள் இவ்வாறு பிரார்த்தனை செய்தனர்.

ஆலய அர்ச்சகர் அவர்களது பக்தியைச் சோதித்து அறிய விரும்பினார்.

ஒரு நாள் இரவு அவர் அம்பாள் சிலைக்குப் பின்னால் நின்றுகொண்டார்.

அம்பாளின் தங்கக் கையைத் தமது கையில் மாட்டிக்கொண்டார். அந்தக் கையை அசைத்து, ''முக்தி பெற விரும்புகிறவர்கள் இப்போதே என்னிடம் வாருங்கள்'' என்று கூறினார்.

அவர்களில் எவரும் சிலையின் அருகில் செல்லத் துணியவில்லை.

''என் பேத்திக்கு இன்னும் திருமணம் ஆகவில்லையே. இப்போது நான் எப்படி முக்தி அடைய முடியும்?'' என்று ஒரு விதவைக்கு எண்ணம் தோன்றியது.

''என் மூத்த மகனுக்கு இன்னும் குழந்தை பிறக்கவில்லையே. நான் இன்னும் சிறிது காலம் கழித்து முக்தி அடைந்துகொள்ளலாம்'' என்று மற்றொரு விதவை எண்ணினாள்.

ஒவ்வொருவரும் இப்படி ஒவ்வொரு காரணம் கண்டுபிடித்தனர்.

இதுதான் உண்மையான நிலை. ஒருவரும் உண்மையிலேயே முக்தி பெற விரும்பவில்லை.

பெரும்பாலான மக்களின் பிரார்த்தனையெல்லாம் உதட்டளவுப் பிரார்த்தனை. வழிபாடெல்லாம் போலி வழிபாடு.

**நீதி : உதட்டளவுப் பிரார்த்தனையையும் போலி வழிபாட்டையும் விட்டுவிடுங்கள். சிரத்தையுடனும் நேர்மையுடனும் செயற்படுங்கள்.**



# அன்னையின் அருள் மொழிகள்

ஸ்ரீ சாரதாதேவியார் அருளியது

1. ஞான சாதனம் என்பது ஆண்டவனுடைய தாமரைப் பாதங்களில் மனதை நிறுத்தி அவன் நினைவிலேயே மூழ்கிக் கிடப்பதாகும்.

2. நித்திய அநித்தியப் பொருள்களைப் பற்றி எப்போதும் விசாரணை செய். உன் மனதைக் கவருகிற புறப் பொருள்கள் எல்லாம் அழியும் தன்மையுடையன என்பதை அறிய முயற்சி செய்; உன் கவனத்தை ஆண்டவனிடம் திருப்பு.

3. இந்த மனிதப் பிறவி பெற்றதனால் நீ பாக்கியவான். உன்னால் முடியும் அளவுக்கு ஆண்டவனைத் துதிசெய். நீ கஷ்டப்பட்டு உன்னுடைய ஆன்மிக முன்னேற்றத்திற்காக உழைக்க வேண்டும். உழைக்காமல் எதையும் அடைவது முடியாது. உலகச் செயல்களில் ஈடுபட்டிருந்தாலும் தினந்தோறும் பிரார்த்தனைக்கும் ஞானசாதனைகளுக்கும் ஒரு சிறிது நேரத்தையாவது நீ அவசியம் ஒதுக்க வேண்டும்.



4. ஆன்மிகச் சாதனைகளைப் பழகுவதனால் பூர்வ கர்ம பந்தனங்கள் அறுக்கப்படுகின்றன.

5. மன ஒருமைப்பாட்டுடன் இரண்டு நிமிஷநேரம் கடவுளைப் பிரார்த்திப்பதும், தியானிப்பதும், அவ்விதமின்றிப் பல மணிநேரம் அவற்றைச் செய்வதைக்காட்டிலும் சிறந்தது.

6. எவ்வளவோ தீவிரமாக முயற்சிகளில் ஈடுபட்டிருப்பினும் கடவுளை நினைந்து வணங்கவாவது வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாகத் தியானமும் பிரார்த்தனையும் செய்யும் நேரத்தை அதிகமாக்க வேண்டும்.

7. மந்திரம் உடலைச் சுத்தமாக்குகிறது. கடவுள் நாமத்தை உச்சரிப்பதனால் மனிதன் பரிசுத்தனாகிறான். ஆகையால் அவன் நாமத்தை எப்போதும் ஜபித்துக்கொண்டிரு. நீ செய்யும் நற்செயல் முன்பு செய்த பாவங்களைப் போக்கும். தியானத்தாலும் ஜபத்தாலும் ஆன்மிக நினைவினாலும் பழைய தீவினைகளை நீக்கி விடலாம்.

8. ஆன்மிகக் காட்சி நிறைவுபெறும் போது, ஒருவன் தன் இதயத்தில் குடி கொண்டுள்ள ஆண்டவனே நசுக்கப்பட்டவர், துன்புறுத்தப்பட்டவர், தீண்டாதோர், சண்டாளர் ஆகிய மற்ற எல்லாரிடத்திலும் இருப்பதை உணர்வான்; இந்த உணர்வு உண்மையான பணிவுடைமையைத் தரும். ஆண்டவன் எல்லோருக்கும்

உரியவன். தீவிரமாகச் சாதனம் செய்தால் விரைவில் அவனை அடையலாம்.

9. காற்று மேகத்தைக் கலைப்பதைப் போல ஆண்டவன் நாமம் உலகப்பற்றுகிய மேகத்தைக் கலைத்து விடும்.

10. பரிசுத்த மனமுடைய ஒருவன் எல்லாவற்றையும் பரிசுத்தமான தாகவே காண்கிறான்.

11. ஒவ்வொருவரும் சோம்பலை விடுத்து, குறிப்பிட்ட காலத்தில் ஜபமும் தியானமும் செய்யப் பழக வேண்டும்.

12. பிறரிடத்தில் குற்றம் காணும் ஒருவன், முதன்முதல் தன் மனதையே மாசுபடுத்திக்கொள்பவன் ஆகிறான்.

13. தொடர்ந்து தியானம் செய்தால் மனம் உறுதி பெற்றுவிடும்.

14. மகானுக்கும் சாதாரண மனிதனுக்குமிடையே உள்ள வேற்றுமை இதுதான்—மனிதன் உடலை விட்டுப் பிரியும்போது அழுகிறான். ஆனால் மகானே சிரிக்கிறான். அவனுக்குச் சாவு வெறும் விளையாட்டே. ஆன்மிகச் சாதனைகளைப் பொறுத்தவரையில், கணவனும் மனைவியும் ஒரே கருத்துடையவர்களாக இருந்தால் அந்தத் துறையில் முன்னேறுவது எளிதாகும்.

15. முதன்முதல் நீ அருந்தும் எதையும் இறைவனுக்குச் சமர்ப்பி. இறைவனுக்கு அர்ப்பிக்கப்படாத உணவை ஒருவன் அருந்தக்கூடாது. உன் உணவு எப்படியோ அப்படியே உன் இரத்தமும். தூய்மையான உணவின் மூலம், நீ தூய இரத்தத்தையும், தூய மனதையும், தூய வலிமையையும் பெறுகிறாய். தூய மனம் பிரேம பக்தியை உண்டாக்குகிறது.

16. கடவுள் மட்டுமே மெய்; மற்றவை எல்லாம் பொய்.

துணி அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. உடம்பு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. வீடு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. நம் மனம் அழுக்கில்லாமல் இருக்க வேண்டும். அதற்கு அம்பாளுடைய சரணாரவிந்தத் தியானம்தான் வழி.

—காஞ்சிப் பெரியவர்

கடவுளிடம் எப்போதும், 'அது வேண்டும், இது வேண்டும்' என்று கேட்டுக்கொண்டேஇராதீர்கள். கடவுள் ஏற்கனவே கொடுத்திருப்பதற்கு நன்றி செலுத்துங்கள்.—**நார்மன் வின்ஸென்ட்**

கடலளவு தண்ணீர் இருந்தாலும் நீ பருகும் அளவுக்கே அது உனக்குப் பயன்படும். அது போல் இன்பம், துன்பம் ஆகியவை நீ எடுத்துக்கொள்ளும் அளவிற்கே உன்னை அணுக முடியும். **—ஓர் அன்பர்**

பிறர் குறை காண்பவன், அரை மனிதன். தன் குறை காண்பவன், முழு மனிதன். **—சாக்ரடீஸ்**

துஷ்டர்களுக்கு அருகில் இருந்தால் துன்பம்தான் ஏற்படும். அதற்காக நாம் துஷ்டர்களை விட்டு விலக வேண்டுமே தவிர, அவர்களைத் தூஷிக்கக்கூடாது.

ஆற்றங்கரையில் குடிசை அமைத்து வாழ்ந்தால், உடைப்பு எடுத்துக்கொள்ளும்போது குடிசை போகத்தான் போகும். அதற்காக ஆற்றங்கரையைக் குறை சொல்லலாமா? **—கிருஷ்ணப்ரேமி**



# நூல் அறிமுகம்



**1. புத்தி புகட்டும் புராணக் கதைகள்**

13 கதைகளின் தொகுப்பு. பக்கம் 140—ரூ. 8-50

ஆசிரியர்: சி. முத்துப்பிள்ளை

**2. மகான்கள் கதைகள்**

சுவாமி விவேகானந்தர், சங்கரர், ஆல்பர்ட் சுவைட்சர், காகவாப் பெரியார், மேரி சிலெசர் ஆகியோரின் வரலாறுகள் அடங்கியது. பக்கம் 196—ரூ. 12

ஆசிரியர்: புலவர் செந்துறைமுத்து

**3. முத்தமிழ் வித்தகர்கள்**

இயற்றமிழ் வித்தகர் திரு.வி.க, இசைத்தமிழ் வித்தகர் விபுலானந்தர், நாடகத்தமிழ் வித்தகர் சுந்தரனார் என்ற மூன்று அத்தியாயங்களைக் கொண்ட நூல். ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகையின் முன்னாள் ஆசிரியர் சுவாமி விபுலானந்தரின் வரலாறு 41 பக்கங்களில் இடம் பெற்றுள்ளது. பக்கம் 128-ரூ. 8

ஆசிரியர்: வசந்தா இராமநாதன்

**4. சங்கரர் மாகாத்மியம்**

ஆதிசங்கரர் வரலாறு. பக்கம் 143—ரூ. 7

**5. எண்ணத்தில் புதுமைகள்**

மனத்தத்துவக் கண்ணோட்டத்தில் எழுதப்பட்டிருக்கும் நூல். பக்கம் 172-ரூ. 7-50

மேலே குறிப்பிட்ட இரண்டு நூல் களுக்கும்

ஆசிரியர்: இரத்தின சண்முகனார்

மேற்கூறிய ஐந்து நூல்களையும் வெளியிட்டோர்: அறிவு நிலையம், 60-1, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-600 005.

**6. திருமயிலை உலா**

சிற்றிலக்கியம் என்ற பிரிவைச் சேர்ந்த இந்த நூல் தமிழ்ச் சுவடியாக இது வரையில் இருந்து வந்துள்ளது. இதை மு.கோ. ராமன் பிரதிசெய்து முன்னுரை குறிப்புரைகளுடன் பதிப்பித்துள்ளார். பக்கம் 116—ரூ. 7

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டி.டி.டி.ஐ, தரமணி, சென்னை-600113.

**7. அஷ்டோத்தரசத நாமாவளி**

ஸ்ரீராமகிருஷ்ணர், ஸ்ரீசாரதாதேவியார், ஸ்ரீ சுவாமிஜி ஆகியோரைக் குறித்த அஷ்டோத்தரசத நாமாவளிகள் அடங்கியது. நாமாவளிகள் தமிழ்,

ஆங்கிலம், சம்ஸ்கிருதம் ஆகிய மூன்று மொழிகளிலும் இடம் பெற்றுள்ளன.
பக்கம் 52—ரூ. 5.

ஆசிரியை: ருக்மிணி குப்பண்ணு

C/o கே. சுப்ரமண்யன், 36-ஏ, சுப்ரமண்யபுரம் எக்ஸ்டன்ஷன், சேலம்—636007.

**8. திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பகுதி—1**

பக்கம் 216—ரூ. 15

ஆசிரியர்: எஸ். ராஜு செட்டியார் பி.ஏ, பி.எல்.

கம்பன் பதிப்பகம், 16, T.P. கோவில் வீதி, திருவல்லிக்கேணி, சென்னை-600 005.

**9. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்**

தமிழ் லிபியில் சம்ஸ்கிருத மூலமும் நாமாவளியும், தமிழ்ச் செய்யுள் மொழியாக்கமும், தமிழ் அர்ச்சனையும் கொண்ட நூல். பக்கம் 192—ரூ. 12.

ஆசிரியை: ஹா. கி. வாலம்

**10. உபநிஷதங்களின் சாரம்**

பக்கம் 109—ரூ. 6

ஆசிரியர்: நடராஜ சிவாசாரியார்

**11. திருமாலின் திருஅவதாரங்கள்**

பக்கம் 188—ரூ. 11

ஆசிரியர்: மாருதிதாசன்

மேலே குறிப்பிட்ட மூன்று நூல்களையும் வெளியிட்டோர்: நர்மதா பதிப்பகம், 10, சோமசுந்தரம் தெரு, தி. நகர், சென்னை-600017.

**12. கீதாம்ருதம்**

ஸ்ரீமத் பகவத்கீதை கருத்துரை. பக்கம் 78. விலை குறிப்பிடப்பெறவில்லை.

தொகுப்பு: கே. ஆர். ராதாகிருஷ்ணன்

கே. ராமகிருஷ்ண பிள்ளை நினைவு அறக் கட்டளை, 80, திருவேங்கடசாமி ரோடு, ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்-2

**13. பக்த விஜயம்**

28 மகான்களின் கதைகள் அடங்கியது. பக்கம் 244—ரூ. 11-50

**14. சந்தியாவந்தனம் செய்வது எப்படி?**

பக்கம் 96—ரூ. 5-25

மேலே குறிப்பிட்ட இரண்டு நூல்களையும் மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழுவினர் எழுதியுள்ளனர்.

மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம்செட்டி ரோடு, தி. நகர், சென்னை—600017.

**15. ஸர்வஜன ஸர்வ தேவதா பூஜை முறை பாராயண சுலோகங்கள்**

சம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் சுலோகங்கள் தரப்பட்டுள்ளன. பக்கம் 38—ரூ. 2

பவானி புக் சென்டர், 19, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை—600033.

**16. மகாப் பிரதோஷ மகிமை**

பக்கம் 72—ரூ. 3

ஆசிரியர்: நாகர்கோவில் கிருஷ்ணன்

கிரி டிரேடிங் ஏஜென்சி, 10, கபாலீச்வரர் சன்னிதித் தெரு, மயிலாப்பூர், சென்னை—600004.

## செய்திகள்

*நவம்பர் 5-ஆம் தேதி காலையில் குயிலம், ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த உழவர் மன்றத்தில் சுவாமி கமலாத்மானந்தர் உரையாற்றினார்.

*போளூர், விவேகானந்த நர்சரிப் பள்ளியில் நவம்பர் 6-ஆம் நாள் சுவாமி கமலாத்மானந்தரின் ஆன்மிகச் சொற்பொழிவு நடைபெற்றது.

*விழுப்புரம் அருகிலுள்ள மாம்பழப் பட்டு கிராமத்தில் நவம்பர் 7-ஆம் தேதி ஸ்ரீசாரதா நர்சரிப் பள்ளியைக் கமலாத்மானந்தர் துவக்கி வைத்தார்.



ஸ்ரீசாரதாதேவியார்

# என்னை நினைத்துக் கொள்!

ஆர். நிவேதிதா

ஒரு கல்லூரி மாணவர் அடிக்கடி ஸ்ரீசாரதர்தேவியாரைத் தரிசிக்க வருவது வழக்கம்.

ஒரு நாள் அவர் வழக்கம் போல் வந்து அன்னையைத் தரிசித்தார்.

அன்னையிடம் விடைபெறும் சமயத்தில், ''அம்மா! தாங்கள் இருக்கும் இடம் மிகப் புனிதமானது. தெய்விகம் நிறைந்த இந்த இடத்திற்கு வரக்கூடிய தகுதி எனக்கு இல்லை. ஆதலால், தங்களிடமிருந்து நான் நிரந்தரமாக இப்போது விடை பெற்றுக்கொள்கிறேன். இனி நான் இங்கு வந்து தங்களைத் தரிசிக்கப்போவதில்லை'' என்று வேகமாகச் சொல்லிவிட்டு, அந்த இடத்தை விட்டு விரைந்து சென்றார்.

உடனே ஸ்ரீசாரதாதேவியார் அந்த இளைஞரின் பின்னாலேயே விரைந்து சென்றார்; அவரது சட்டையைப் பிடித்திழுத்து, இளைஞரின் முகத்தைத் தம் பக்கமாகத் திருப்பினார்.

ஸ்ரீ அன்னையார் அந்த இளைஞர் தோளின் மீது பரிவோடு தம் கையை வைத்தார். பிறகு நேருக்கு நேர் இளைஞரின் கண்களை ஆழ்ந்து ஊடுருவிப் பார்த்தபடியே, ''மகனே! எப்போதெல்லாம் உன் மனம் பொருந்தாத எண்ணம் காரணமாகச் சலனமடைகிறதோ, அப்போதெல்லாம் என்னை நீ நினைத்துக்கொள். கவலைப்படாதே'' என்று உறுதியான குரலில், கருணை ததும்பக் கூறினார்.

பிறகு அந்த இளைஞர் போவதற்கு அனுமதித்துவிட்டு அன்னை தம் அறைக்குத் திரும்பினார்.

அந்தக் கல்லூரி மாணவர் தமது வீட்டிற்குச் செல்லும் வழியில், ''என்னை நினைத்துக்கொள், என்னை நினைத்துக் கொள், என்னை நினைத்துக்கொள்'' என்று அன்னை கூறியதையே திரும்பத் திரும்ப நினைத்துப் பார்த்தார். அன்னையின் அருள் ததும்பும் பார்வை அவரது உள்ளத்தில் இருந்துகொண்டே இருந்தது.

அதுமுதல் அன்னையின் அந்தச் சொற்களும் கருணை மிகுந்த பார்வையும் அந்த இளைஞரின் ஆன்மிக வாழ்க்கைக்குச் சிறந்த பாதுகாப்பாக அமைந்தன. அதனால் தூய வாழ்க்கையும் அவருக்குக் கைவரப்பெற்றது.

பிற்காலத்தில் அதே கல்லூரி மாணவர் ராமகிருஷ்ண மடத்தில் சேர்ந்து துறவி ஆனார். அவர் வாழ்ந்த நல்வாழ்க்கை, மற்றவர்களுக்கெல்லாம் வழி காட்டக்கூடிய வகையில் சிறந்த லட்சிய வாழ்க்கையாக அமைந்தது.

தூய அன்னையின் திருவருள் இந்தத் தூயவரை உருவாக்கியதைப் போலவே

இப்போதும் நூற்றுக் கணக்கான தூய வர்களை உருவாக்கிக்கொண்டிருக்கிறது; உருவாக்கவும் போகிறது.

துன்பம் வரும்போதெல்லாம், தீய எண்ணம் தோன்றும் போதெல்லாம், 'என்னை நினைத்துக்கொள்!' என்ற அன்னையின் அமுத வாக்கை நினைத்துக் கொள்வோமாக. இந்தப் பழக்கம் நம் மிடையே நிலைபெறுமானால் அது நம்மைப் பெரிதும் அமைதிப்படுத்தும்; ஆறுதல் பெறச் செய்யும்; ஆன்ம நெறிக்கு ஆற்றுப்படுத்தும்.



ஸ்ரீ சாரதா தேவியார்

ஒரு கதை

## சரியான மனப்பான்மை

ஒரு பக்தருக்கு ஒரு மைந்தன் இருந்தான். அவன் மிகவும் அழகு வாய்ந்தவன். நல்ல நடத்தையும் தர்மப்பற்றும் கொண்டவன். ஒரு நாள் திடீரென்று அந்த அருமை மகன் இறந்துவிட்டான்.

பக்தருக்கு மகனின் மறைவால் வருத்தம் தோன்றவேயில்லை. அதைச் சாதாரண நிகழ்ச்சியாகவே அவர் கருதினார். மக்கள் அவருடைய போக்கைக் கண்டு வியப்படைந்தனர்.

அவரை அணுகி, ''உங்கள் மகன் இறந்து போயிருக்கும்போது நீங்கள் எப்படிக் கவலையில்லாமல் இருக்கிறீர்கள்? முகத்தில் மகிழ்ச்சிக் குறிகளும் தென்படுகின்றனவே!'' என்று கேட்டனர்.

அந்தப் பக்தர் சொன்னார்—தோட்டக் காவலன் தோட்டத்தில் மலர்ந்த மலர்களைத் தொடுத்து மாலை கட்டி அதைத் தன் தலைவனுக்குக் கொடுத்துவிட்டுத் திரும்பும்போது மகிழ்கிறானா? அழுகிறானா? அது போல, எல்லாப் பொருள்களும் இறைவனுடையவை. எந்தப் பொருளிலும் எனக்கு உரிமை கிடையாது. இறைவன் ஒரு பொருளை என்னிடம் கொடுத்துக் காத்து வருமாறு ஏவினான். நான் அந்தப் பொருளைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து வந்தேன். இறைவன் திரும்ப அந்தப் பொருளைப் பெற்றுக் கொண்டுவிட்டான். நல்ல நிலைமையிலேயே பொருளை உரிமையாளரிடம் திரும்பக் கொடுத்ததில் நான் மகிழ்கிறேன்.

சில நாட்களிலேயே பிறர் பொருளாகிய அந்த மகன் என் மகன் என்றும், எனக்குத்தான் சொந்தம் என்றும் கெட்ட எண்ணம் என் மனதில் சிற்சில சமயங்களில் தோன்றிவிட்டது. அந்த எண்ணம் நிலைபெறுவதற்கு முன்பே, உரியவரிடம் பொருள் சேர்ந்தது எனது பாக்கியமாகும்.

அந்தப் பொருள் என் பாதுகாப்பில் இருந்தபோது நான் சில சமயங்களில் தவறிழைத்திருக்கலாம். இவற்றையெல்லாம் மன்னித்துத் தன் பொருளைப் பெற்றுக்கொண்டானே இறைவன் என்றே நான் நிம்மதியடைகிறேன் என்று அந்தப் பக்தர் அவர்களிடம் கூறினார்.

அவருடைய உயர்ந்த மனப்போக்கைக் கண்டு அங்கே கூடியிருந்த மக்கள் அவரைத் தெய்வாம்சம் பெற்றவர் என்று போற்றினர்.



# சொல்ல மாட்டேன் அடியேன்!

-தம்பி சீனிவாசன்

வேதாந்ததேசிகரைப்பற்றிய வரலாறுகளில் ஒன்று இது:—

'வேதாந்ததேசிகருக்குச் சம்ஸ்கிருத ஞானம் நிறைய உண்டே தவிரத் தமிழிலும் தமிழ்ப் பிரபந்தங்களிலும் ஈடுபாடு உண்டா?' என்று சில மாணவர்கள் சந்தேகப்பட்டார்கள்.

திவ்யப் பிரபந்தம் பாராயணம் செய்யும் அந்த மாணவர்களும் அவர்களுடைய குருவும் இவ்விதம் பேசிக்கொண்டிருந்தபோது சாலை வழியே தேசிகர் நடந்து வந்தார்.

சாதுரியமான கேள்வி பதில்களில் பிடித்தமுள்ள ஆசிரியர் அப்போது தம் மாணவர்களிடம் ஒரு கேள்வி கேட்டார்—'' 'பால பானு' என்ற சொல்லுக்கு நேர்த் தமிழ்ப் பதமாக ஆழ்வார் ஏதாவது சொல்லியிருக்கிறாரா? அத்தகைய சொல் வரும் பாசுரம் எது?'' என்பது கேள்வி.

மாணவர் எவருக்கும் பதில் சொல்லத் தெரியவில்லை.

இதற்குள் அருகே வந்த வேதாந்ததேசிகரை அந்த ஆசிரியர், ''அப்பனே'' என்று அழைத்தார்.

''அடியேன்!'' என்றார் தேசிகர் அடக்கமாக.

''பாலபானு என்ற பிரயோகத்தின் தமிழ்ச் சொல் வரும் பாசுரம் எது தெரியுமா?''

''சொல்லமாட்டேன் அடியேன்'' என்று கூறி வேதாந்ததேசிகர் அகன்றுவிட்டார்.

''பார்த்தீர்களா! அவருக்குத் தமிழ் தெரியாது என்று நாங்கள் அப்போதே சொல்லவில்லை?'' என்றார்கள் மாணவர்கள்.







குரு அவர்களைக் கோபித்தார்; ''என்ன, புரியவில்லையா உங்களுக்கு? அவர் சொல்லிச் சென்றாரே அதுதான் விடை. 'சொல்ல மாட்டேன் அடியேன்' என்று தொடங்குகிறது திருவாய்மொழிப் பாடல் ஒன்று. அதைத்தான் அவர் குறிப்பிட்டார். அதிலே 'இளஞாயிறு' என்ற சொல் வருகிறது. பாலபானுவுக்கு ஈடாக இவ்வளவு சொன்னவரை ஒன்றும் தெரியாதவர் என்கிறீர்களே நீங்கள்!'' என்று தெளிவாக விளக்கினார்.

அந்தத் திருவாய்மொழிப் பாசுரம் இதோ:—

**சொல்லமாட்டேன் அடியேன் உன் துளங்கு சோதித் திருப்பாதம்**
**எல்லையில் சீர் இளஞாயிறு இரண்டு போல் என் உள்ளவா!**
**அல்லல் என்னும் இருள் சேர்தற்கு உபாயம் என்னே? ஆழிசூழ்**
**மல்லை ஞாலம் முழுதுண்ட மாநீர்க் கொண்டல் வண்ணனே!**

—8-5-5.




* சேலம், ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரமத்தில் ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த இளைஞர் மாநாடு நடைபெற்றது. சேலத்தைச் சேர்ந்த 100 கல்லூரி மாணவ-மாணவியர் பங்கேற்றனர்.

* சேலம் மாவட்டம், குள்ளப்பநாய்க்கனூர் அரசினர் உயர்நிலைப் பள்ளியில் இலக்கிய மன்ற விழா நடைபெற்றது. தலைமை ஆசிரியர் பொன்னரசு தலைமை வகித்தார். சுவாமி ராஜேசானந்தர் சிறப்புரை நிகழ்த்தினார்.

*பாண்டிச்சேரி, ஸ்ரீராமகிருஷ்ண சேவா சங்கம், விஜயதசமியன்று 'ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயா' என்ற பெயரில் நர்சரிப் பள்ளியைத் துவக்கியுள்ளது.

*போளூர், ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றத்தில் விஜயதசமியன்று சுவாமி குமாரானந்தர் 'விவேகானந்த வித்யாலயா' நர்சரிப் பள்ளியைத் துவக்கி வைத்தார்.

*சிவகாசி, ஸ்ரீசுவாமிஜி சன்மார்க்கப் பேரவையின் சார்பாகச் சிவன்கோயிலில் அக்டோபர் 17, 18 ஆகிய தேதிகளில் சுவாமி தன்மயானந்தர் 'இறைவாழ்வு' குறித்துச் சொற்பொழிவாற்றினார். பிரம்மசாரி அசிந்த்ய சைதன்யாவின் பக்திப் பாடல்களும் இடம் பெற்றன.

*அண்டப்பேட்டை, ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயாவில் நவம்பர் 5-ஆம் நாள் சுவாமி கமலாத்மானந்தர் உரையாற்றினார்.

*செங்கம், ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றத்தில் நவம்பர் 5-ஆம் நாள் சுவாமி கமலாத்மானந்தர் 'ஸ்ரீராமகிருஷ்ணரும் பகவத்கீதையும்' குறித்து உரை நிகழ்த்தினார்.

*திருவண்ணாமலை, ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றத்தில் நவம்பர் 6-ஆம் தேதி சுவாமி கமலாத்மானந்தரின் ஆன்மிகச் சொற்பொழிவு இடம் பெற்றது.

*விழுப்புரம், ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயா மெட்ரிகுலேஷன் பள்ளியில் நவம்பர் 7-ஆம் தேதி சமூக சேவைச் சங்கம் அமைக்கப்பட்டது. சுவாமி கமலாத்மானந்தர் சிறப்புரை நிகழ்த்தினார்.



# திருவண்ணாமலை



-ராஜம் ஜயராமன்

'அண்ணாமலை' என்பதற்கு 'எட்டாத மலை' என்று பொருள்.

ஒரு சமயம் திருமாலுக்கும் நான்முகனுக்கும் அடியும் முடியும் எட்டாதபடி சிவலிங்கத் திருமேனி ஒளிவடிவாகத் தோன்றியது. அதனால் அணுகுவதற்கும் இயலாத மலை என்ற கருத்தில் 'அண்ணாமலை' என்ற பெயர் எழுந்தது. இதை, ''அண்ணலாகா அண்ணல் நீழல் ஆரழல் போல் உருவம்'' என்று திருஞான சம்பந்தர் கூறுவதிலிருந்து உணரலாம்.

**கோயில் அமைப்பு முறை**

திருவண்ணாமலை என்பது மலையின் பெயர். இதுவே ஊரின் பெயராகவும் வழங்குகிறது. திருவண்ணாமலைக் கோயிலின் பரப்பளவு சுமார் 24 ஏகர் (450 கிரவுண்டுகள்). இந்த ஆலயம் ஆறு பிராகாரங்களுடன் அமைந்துள்ளது.

திருமஞ்சன கோபுரம்.



கீழ்த் திசையிலுள்ள கோபுரத்தைப் பெரிய கோபுரம் என்பர். இது பதினொரு நிலை கொண்டது. 135 அடி நீளம், 98 அடி அகலம், 217 அடி உயரம் கொண்டு விளங்குகிறது.

தஞ்சைப் பெரிய கோயிலின் விமானத்தின் உயரம் 216 அடி ஆகும். அதைவிட உயரமாக இருக்க வேண்டும் என்ற கருத்தில், ஓர் அடி உயரம் அதிகமாக வைத்துத் திருவண்ணாமலை ராஜகோபுரம் கட்டப்பட்டதாகச் சொல்லுகிறார்கள். இந்தக் கிழக்கு வாயிலே பிரதான வாயிலாகும்.

வடக்கே உள்ள கோபுரத்திற்கு 'அம்மணி அம்மாள் கோபுரம்' என்று பெயர். தெற்கே உள்ளது திருமஞ்சனக் கோபுரம்; மேற்கே உள்ளது 'பேய்க் கோபுரம்'. இது மேற்கே இருப்பதனால் பேச்சு வழக்கில் 'மேக் கோபுரம்' என்று அழைத்தனர். அதுவே நாளடைவில் மருவி, 'பேய்க் கோபுரம்' என்று இப்போது வழங்கி வருகிறது.

இந்தக் கோயிலில் ஒன்பது கோபுரங்கள் அமைந்துள்ளன. கிழக்கு வாயிலான ராஜகோபுரத்தின் வழியாக உள்ளே செல்கிறோம். அங்கே வலப்புறத்தில் ஆயிரங்கால் மண்டபமும், ரமண மகரிஷி தவம் செய்த பாதாள லிங்கம் உள்ள குகையும் உள்ளன. இந்த மண்டபத்திற்கு எதிரே இடப்புறம் கம்பத்து இளையனார் சந்நிதி அமைந்துள்

ளது. இது அருணகிரிநாதரின் பாடலுக்கு இரங்கி முருகப்பெருமான் பிரபுடதேவ மகாராஜனுக்குக் கம்பத்தில் காட்சி கொடுத்த இடம் ஆகும்.

இந்தச் சந்நிதிக்குத் தெற்கே சிவகங்கைத் தீர்த்தமும், சிவகங்கை விநாயகர் சந்நிதியும் காணப்படும். இவற்றைக் கடந்து உள்ளே செல்லும் வழியில் இருப்பது பெரிய நந்தி என்ற அதிகாரநந்தி ஆகும். இது வல்லாள மகாராஜன் கட்டியது என்றும், இதன் நீளம் ஆறு அடி என்றும் அறிகிறோம்.

மேலும் உட்புறம் சென்றால், வல்லாள மகாராஜன் கோபுரம் காணப்படுகிறது. இந்தக் கோபுரத்திலிருந்துதான் அருண

**வல்லாள மகாராஜன் கோபுரம், பாதாளலிங்கம் உள்ள மண்டபம், ஆயிரம்கால் மண்டபம்.**



கிரிநாதர் கீழே விழும்போது முருகப்பெருமான் அவரைத் தாங்கி அருள் வழங்கினர் என்பர். அந்த இடத்தில் கோபுரத்து இளேயனர் என்ற சந்நிதி இருக்கிறது. இதைத் தாண்டி உள்ளே செல்லும்போது பிரம்ம தீர்த்தத்தையும் திருமஞ்சனக் கோபுரத்தையும் பார்க்கிறோம்.

பிரம்ம தீர்த்தப் பிராகாரத்தைக் கடந்து உள்ளே சென்றால் காணப்படுவது கிளிக் கோபுரம். அருணகிரிநாதர் கிளியாக இருந்து கந்தரனுபூதி பாடியதை நினைவுபடுத்தும் விதத்தில் இந்தக் கோபுரத்தை அமைத்திருக்கிறார்கள்.

கிளிக் கோபுரத்தைத் தாண்டியதும் பதினறு தூண்கள் கொண்ட காட்சி மண்டபம் வருகிறது. இந்த மண்டபத்தில் கார்த்திகைத் திருநாளில் பஞ்ச மூர்த்திகள் மேற்கு முகமாக எழுந்தருளி (மலேயைப் பார்த்தவாறு) தீபதரிசனக் காட்சி அளிப்பார்கள். இந்த மண்டபத்திற்கு நேர் எதிரே அகண்ட தீபம், பலி பீடம், நந்தி, கொடிமரம் ஆகியவை உள்ளன. கார்த்திகைத் தீபத்தன்று இந்த இடத்தில் பஞ்ச மூர்த்திகளுக்குக் காட்டப்படும் கர்ப்பூர தீபம், அகண்ட தீபத்தில் கொழுந்துவிட்டு எரியும் ஒளிப் பிழம்பு, மலேமீது ஏற்றப்படும் ஜோதி ஆகிய மூன்றையும் ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் இருந்தபடி பார்ப்பது மிகவும் சிறப்பான அரிய காட்சியாகும். இது மூன்றாம் பிராகாரமாகும்.

**ஸ்ரீ அண்ணுமலேயார் ஸ்ரீ உண்ணுமுலே அம்மன்**



கொடிமரத்தின் எதிரில் சம்பந்த விநாயகர் சந்நிதி இருக்கிறது. அதற்குத் தெற்கே தல விருட்சமான மகிழமரம் உள்ளது. அதற்கும் மேற்கே கல்யாண மண்டபம் அமைந்துள்ளது. வாயிலின் தென்புறம் பழனியாண்டவர் சந்நிதி இருக்கிறது.

இதைத் தாண்டி உள்ளே சென்றால் இரண்டாம் பிராகாரம் வருகிறது. இந்தப் பிராகாரத்தில் சனேச்சரர், சனந்தேசுவரர் முதலான மூர்த்திகள், காசிலிங்கம், அறுபத்துமூன்று நாயன்மார்களின் திருவுருவங்கள், சப்தமாதர், சோமாஸ்கந்தர், வேணுகோபாலர், காலசம்மாரர், பைரவர் முதலிய மூர்த்திகளேக் காணலாம்.



திருவண்ணுமலை கோயில் தேர்

முதல் பிராகாரத்தில் தட்சிணுமூர்த்தி, லிங்கோத்பவர், பிரம்மா, துர்க்கை, சண்டிகேசுவரர் முதலியோர் உள்ளனர்.

துவாரபாலகர்களைத் தாண்டிக் கருவறைக்குள் நுழைந்தால் அங்கே சுயம்பு லிங்கமாக அண்ணுமலை அண்ணல் காட்சி தருகிறுர். இவருக்கு அருணுசலேசுவரர் என்ற திருப்பெயரும் உண்டு.

ஆவுடையார் வட்டமாக அமைந்திருக்கிறது. ருத்திரபாகம் சொர்ண பந்தனத்துடன் திகழ்கிறது. தீட்சை பெற்ற சிவாசாரியார்கள் தவிர வேறு யாரும் அண்ணுமலையாரை அணுக முடியாது.

## அம்பிகையின் சந்நிதி

இந்தக் கோயிலில் அம்மன் சந்நிதி தனியாக அமைந்துள்ளது. இங்குள்ள அம்மனுக்கு உண்ணுமுலை அம்மன் என்று பெயர். வடமொழியில் அபீதகுசாம்பாள் என்பர். கருவறையைச் சுற்றி உற்சவ மூர்த்திகள் உள்ளனர். கருவறைக்குள் அம்மன் நின்ற கோலத்தில் தாமரையும் டோலஹஸ்தமும் கொண்டு விளங்குகிருள். அம்பிகையின் உயரம் மூன்றடி. சந்நிதிக்கு வெளியே அஷ்டலட்சுமி மண்டபம் உள்ளது.

## புராண வரலாறு

ஒரு சமயம் பிரம்மாவும் திருமாலும் தமக்குள் யார் பெரியவர் என்று சண்டையிட்டனர். இருவரும் தாமே பெரிய கடவுள் என்று தர்க்கம் செய்தனர். அப்போது சிவபெருமான் இவர்களின் முன், அடியும் முடியும் இல்லாத பெரிய நெருப்பு மலையாகத் தோன்றிஞர். பிரம்மாவும் திருமாலும் எதிரில் தோன்றிய ஒளிவடிவத்தின் அடியையும் முடியையும் காணச் சென்றனர். யார் கண்டு வருகிருர்களோ அவர்களே பெரியவர் என்று முடிவு செய்தனர்.

திருமால் வராக உருவம் கொண்டு அடியைக் காணப் புறப்பட்டார். இறுதியில் காண முடியாமல் தோல்வியுற்றுத் திரும்பினர்.

பிரம்மா முடியைக் காண அன்னத்தின் உருவத்தில் சென்றுர். அவராலும் காண முடியவில்லை. அவர், எதிரே சிவபெருமானின் முடியிலிருந்து வீழ்ந்துகொண்டிருந்த தாழம்பூவைத் தமக்குச் சாட்சி கூறும்படி கேட்க, அது சம்மதித்தது.

பின்பு பிரம்மா, விஷ்ணுவிடம் தாம் ஒளிப் பிழம்பாய் நின்ற சிவபெருமானின் முடியைக் கண்டதாகவும், தாழம்பூவே அதற்குச் சாட்சி என்றும் பொய் கூறினர்.

அப்போது ஒளிப்பிழம்பிலிருந்து சிவபெருமான் தோன்றி, ''பொய் கூறிய பிரம்மாவிற்கு உலகில் எங்கும் வழிபாடும் கோயிலும் இல்லாமற் போகட்



மலைமீது கார்த்திகை தீபம் ஏற்றப்படும் கொப்பரை

டும். பொய் சொன்ன தாழம்பூவுக்கு இனிச் சிவபூஜையில் இடம் இல்லாமல் போகட்டும்'' என்று சாபமிட்டார்.

இதன்பிறகு பிரம்மாவும் விஷ்ணுவும் அஞ்ஞானம் நீங்கிச் சிவபெருமானைத் துதித்தனர். அவர்களுக்கு இரங்கிய சிவபெருமான், ''நான் ஒரு ஜோதிமலேயாகவும், அந்த மலேயின் சாரலில் சிவலிங்க வடிவமாகவும் காட்சியளிப்பேன். இந்த நிகழ்ச்சியை நினைவுபடுத்தும் வகையில் ஒவ்வோர் ஆண்டும் கார்த்திகைத் திருநாளில் அந்த மலேயின் உச்சியில் ஜோதி விளக்கம் காட்டப்படும். அதைக் காண்போர் திருவடிப் பேறு எய்துவர்'' என்று கூறி மறைந்தார். இதுவே லிங்கோற்பவ மூர்த்தியின் வரலாருகும்.

மேற்கூறிய புராண வரலாற்றையொட்டித் திருவண்ணுமலேயில் ஆண்டுதோறும் கார்த்திகைத் தீபம் மிகப்பெரிய அளவில் கொண்டாடப்பெறுகிறது.



பிரம்மா என்ற சொல் கல்வியை அதாவது அறிவாற்றலேக் குறிக்கும். விஷ்ணு என்பது செல்வத்தைக் குறிக்கும். அறிவாற்றலேக் கொண்டோ பணபலத்தைக் கொண்டோ இறைவனை எட்டிவிட முடியாது என்ற உண்மையைத் திருவண்ணுமலே வரலாறு உட்பொருளாகக் கொண்டுள்ளது.

கல்விச்செருக்கும் செல்வச்செருக்கும் அண்ணலே அடைய உதவ மாட்டா. ஆதியும் அந்தமும் இல்லாத இறைவன் அறிவதற்கு அரியவன். செல்வச் செருக்கைவிடக் கல்விச் செருக்கு அதிகத் தீமை விளேவிக்கக்கூடியது. அது தன் தோல்வியை எளிதில் ஏற்றுக்கொள்வதில்லே. தனது சாதுரியத்தைக் கொண்டு தன் கருத்தை நிலேநாட்டும் இயல்பு கொண்டது. இந்தக் கருத்து, பிரம்மா தாழம்பூவைத் தமக்குப் பொய்ச்சாட்சி சொல்லும்படி செய்தார் என்பதன் மூலம் உணர்த்தப் பெறுகிறது.

தாழம்பூ பொய்ச் சாட்சி சொன்னதனுல் அது சிவபூஜைக்கு உதவாததாயிற்று என்பது, பரமன் சந்நிதியில் பொய்க்கு இடமே இல்லே என்பதைத் தெளிவாக உணர்த்துகிறது.

எவர் மனக்கலக்கம் அடைந்தால் உலக நன்மைக்குத் தீங்கு ஏற்படுமோ, அவர்கள் மனம் மகிழும்படி, தேவதைகளைப் போல அவர்களே நடத்த வேண்டும்.
—விதுர நீதி

பேனுக்குப் பயந்து யாரும் சீலேயை விட்டெறிவதில்லே.

பிச்சைக்காரர்களுக்குப் பயந்து யாரும் சமைக்காமல் இருப்பதில்லே.

மாடுகளோ மான்களோ பயிரை மேய்ந்துவிடுகின்றன என்பதற்காகக் குடியானவர்கள் பயிர்த்தொழிலே விட்டுவிடுவதில்லே.

அதே போலப் பழிக்குப் பயந்து யாரும் நல்ல பணியைச் செய்வதைக் கைவிடக்கூடாது.
—பதஞ்ஜலி



சுசீந்திரம் திருக்கோயில்